ஓம் ஸ்ரீ சாய்ராம்

# சிவபெருமானின் 25 அவதாரங்கள்



ஸ்ரீ சாய் சத்சங்கம்

சேலம்

ஓம் ஸ்ரீசாய் ராம்

# சிவபெருமானின் 25 அவதாரங்கள்

தொகுத்தவர்
**Prof. B.S. நஞ்சுண்ட தீக்சித்**
நெ. 75/5, ஸ்ரீ சாயீஸ்வர நிலையா
ஸ்ரீ நாகேஸ்வர க்ஷேத்திரா
கிட்டிகானஹல்லி, பொம்மசந்திரா அஞ்சல்
பெங்களூரு – 560 099



தமிழாக்கம்
**சாய் வை. பாலசுப்ரமணியன்**
முன்னாள் முதல்வர்
ஸ்ரீ வித்யா மந்திர் மேல்நிலைப்பள்ளி
சேலம் – 636 003.





**ஸ்ரீ சாய் சத்சங்கம்**
சேலம்.

## பேராசிரியர் **Prof. B.S. நஞ்சுண்ட தீக்சித்** M.A.,

### நூலாசிரியர் பற்றி

பெங்களூர், வொயிட்பீல்டு அடுத்த காடுகொடியில் பிறந்தவர். மைசூர் மகாராஜா கல்லூரியில் B.A., பட்டம் பெற்றபின், மைசூர் மகாராஜா சமஸ்கிருதக் கல்லூரியில் சிவாகம சாஸ்திரம் பயின்று தேர்ந்தார். பின்னர் பெங்களூர் சென்ட்ரல் கல்லூரியில் M.A., (முதுகலை) பட்டம் பெற்றார்.

பெங்களூர் கிரிஸ்ட் கல்லூரியில் (கிரிஸ்ட் பல்கலைக் கழகம், பெங்களூர்) வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றினார். பெங்களூர் பல்கலைக்கழக கல்விக் குழுவில் (Academic Council) அங்கத்தினராக பணியாற்றினார்.

பகவான் ஸ்ரீ சத்யசாயிபாபா அருளாசியுடன் அவர் முன்னிலையில் சென்னையில் அதிருத்ரமகாயாகம் செய்தவர். பகவான் சத்யசாயிபாபா முன்னிலையில் புட்டபர்த்தியில் அதிருத்ரமகாயாகம், சிவபார்வதி திருமணம் நடத்தி வைத்தார். கோலாலம்பூர் (மலேசியா), தாய்லாந்து, அட்லாண்டா (USA), ஜப்பான் மற்றும் இந்தியாவில் வொயிட்பீல்ட், பெங்களூர், முத்தனஹல்லி, ஆதி சுன்சன்கிரி, பத்ரிநாத், கேதார்நாத் ஆகிய இடங்களில் அதிருத்ர மஹா யக்ஞம் செய்துள்ளார். வேலூர் தங்ககோயிலில் சகஸ்ர சண்டி ஹோமம் செய்துள்ளார்.

தற்பொழுது கிட்டிகானஹல்லி சீனிவாசப் பெருமாள் கோயில், நஞ்சுண்டேஸ்வரர் கோயில், அட்டிபெள்ளி சோமேஸ்வர நஞ்சுண்டேஸ்வரர் கோயில், பிதுரகுப்பே ஆகிய கோயில்களில் தலைமை அர்ச்சகராகப் பணிபுரிந்து வருகிறார்.

## பேராசிரியர் **Prof. B.S. நஞ்சுண்ட தீக்சித்** M.A.,

### நூலாசிரியர் பற்றி

பெங்களூர், வொயிட்பீல்டு அடுத்த காடுகொடியில் பிறந்தவர். மைசூர் மகாராஜா கல்லூரியில் B.A., பட்டம் பெற்றபின், மைசூர் மகாராஜா சமஸ்கிருதக் கல்லூரியில் சிவாகம சாஸ்திரம் பயின்று தேர்ந்தார். பின்னர் பெங்களூர் சென்ட்ரல் கல்லூரியில் M.A., (முதுகலை) பட்டம் பெற்றார்.

பெங்களூர் கிரிஸ்ட் கல்லூரியில் (கிரிஸ்ட் பல்கலைக் கழகம், பெங்களூர்) வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றினார். பெங்களூர் பல்கலைக்கழக கல்விக் குழுவில் (Academic Council) அங்கத்தினராக பணியாற்றினார்.

பகவான் ஸ்ரீ சத்யசாயிபாபா அருளாசியுடன் அவர் முன்னிலையில் சென்னையில் அதிருத்ரமகாயாகம் செய்தவர். பகவான் சத்யசாயிபாபா முன்னிலையில் புட்டபர்த்தியில் அதிருத்ரமகாயாகம், சிவபார்வதி திருமணம் நடத்தி வைத்தார். கோலாலம்பூர் (மலேசியா), தாய்லாந்து, அட்லாண்டா (USA), ஜப்பான் மற்றும் இந்தியாவில் வொயிட்பீல்ட், பெங்களூர், முத்தனஹல்லி, ஆதி சுன்சன்கிரி, பத்ரிநாத், கேதார்நாத் ஆகிய இடங்களில் அதிருத்ர மஹா யக்ஞம் செய்துள்ளார். வேலூர் தங்ககோயிலில் சகஸ்ர சண்டி ஹோமம் செய்துள்ளார்.

தற்பொழுது கிட்டிகானஹல்லி சீனிவாசப் பெருமாள் கோயில், நஞ்சுண்டேஸ்வரர் கோயில், அட்டிபெள்ளி சோமேஸ்வர நஞ்சுண்டேஸ்வரர் கோயில், பிதுரகுப்பே ஆகிய கோயில்களில் தலைமை அர்ச்சகராகப் பணிபுரிந்து வருகிறார்.

# முன்னுரை

பரமேஸ்வரனாகிய சிவன் மிகவும் புனிதமிக்கவர். பிரபஞ்சம் அழிந்து மீண்டும் உருவாகும் வரை சிவனிடம் பாதுக்கப்படுகிறது. இந்துக்கள் இப்பிரபஞ்சம் கடவுளர்களின் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய வினைகளை சார்ந்தது என நம்புகின்றனர். இம்மூன்று பணிகளை அவர்கள் பிரம்மா - விஷ்னு - சிவன் (மகேஸ்வரன்) ஆகியோர்க்கு இணைத்து கூறுவர்

அவர்கள் முறையே ஆக்கல் - காத்தல் - அழித்து மீட்டல் ஆகிய பணிகளை செய்து வரும் திருமூர்த்திகள் என அழைக்கப்படுகின்றனர்.

கடவுள் ஒருவரே என கருதப்பட்டாலும், இந்து மதத்தில் முப்பத்து முக்கோடி தேவர்கள் உள்ளதாக நம்புகின்றனா. இறைவன் வாழும் உயிர்கள் அனைத்திலும் அங்கமாக திகழ்வதாக அவர்கள் நம்புகின்றனர். அதுவே ஆத்ம ஸ்வருபம் எனப்படுகிறது (பகவத்கீதை).

சிவன் தூய்மையான மிகப்புனிதமான கடவுள், முக்குணங்களில் இருந்து முழு விடுதலை பெற்றவர். நமசிவாய என அவர் நாமத்தை உச்சரித்தாலே பக்தர்கள் புனிதமும், பல நற்பயன்பளும் பெறுவர். துயரம் அடியோடு அழிந்திடவும், உலகில் தோன்றியுள்ள அனைத்தையும் அழிக்கவும், சிறப்புமிக்க இறப்பு தரவும், வல்ல மிருத்யுஞ்சயன் சிவனாகும். அவர் மிகச் சிறந்த யோகி. அறிவின் பிறப்பிடம், அறியாமை அடியோடு அகன்றிட உதவவல்லவர். உலகினை பீடிக்கும் அனைத்துப் பிணிகளையும் நீக்க வல்லவர். ஆலகால விஷத்தை அருந்தி பிரபஞ்சத்தை காத்த பெருமையுடையவர். நீலகண்டனான அவரின் மனைவி பார்வதி. அவரது வசிப்பிடம் கைலாயம். அவரது வாகனம் நந்தி. அவர் சர்ப்ப மாலை அணிந்து திரிசூலம் ஏந்தி காட்சி தருபவர். இறப்பும், விஷமும் பாதிக்கயியலாதவர்.

சிவன் லிங்க உருவத்தில் வணங்கப்படுகிறார். மிகவும் அழகிய பல பெரிய கோயில்களிலும் கர்ப்பகிரகத்தில் சிவன் லிங்க வடிவினாரகவே அருள் பாலிக்கிறார். மேலும் ஐம்பூத அம்சமாக லிங்க வடிவில் அவர் பூஜிக்கப்படுதல் சிறப்பு.

1. வெளி (ஆகாயம்) ஆகாச லிங்கம் (தமிழ்நாடு - சிதம்பரம்)

2. நீர் - ஜம்புகேஷ்வரர் (தமிழ்நாடு - திருச்சிராப்பள்ளி அருகில் உள்ள திருவானைக் கோயில்)

3. அக்னி - அருணாசலேஸ்வரர் ஆலயம் (திருவண்ணாமலை)

4. பூமி - பிருத்விலிங்கம் - (காஞ்சிபுரம் - தமிழ்நாடு)

5. வாயு - வாயுலிங்கம் - (காளஹஸ்தி - ஆந்திரா)

பிறந்தவரெல்லாம் ஒரு நாள் இறத்தல் இயல்பு. உருவானதெல்லாம் ஒரு நாள் அழிந்திடல் திண்ணம். இதுவே இயற்கை விதி. இந்த மறைவினை பின்னிருந்து இயக்குவது சிவனேயாகும்.

சிவனை அவனது கோபம் கருதி ருத்ரன் என்பர். சிவனும் ருத்ரனும் ஆகிய தத்துவங்கள் ஒன்றுதானா என்பது விவாதத்திற்கு உரியது. வேதகாலத்தில் வழங்கிய ருத்ரனும், ஆகமங்கள், புராணங்களில் வழங்கும் சிவனும் இருவரும் வேறு என்றும், பின்னாளில் இரண்டு பிரிவுகளின் கலாசார இணைப்பால் இருவரும் ஒருவரே எனும் கருத்து உருவாயிற்று. வேதகாலத்து ருத்ரனுக்கும் முந்திய, ஆரிய, கலப்பில்லாத கடவுள் சிவன் எனும் கருத்தை வலியுறுத்துகின்றனர் ஆராய்ச்சியாளர்கள்.

சிவன் மனித உருவிலும் லிங்க உருவிலும் வழிபடப்படும் கடவுள். லிங்க உருவம் என்பது விதி. உருவ வழிபாடு விதிவிலக்கு. பொதுவாக சிவன் மிக அழகிய இளைஞனாக சித்தரிக்கப்படுகிறார். அவர் மிகவும் வசீகரமான சிறந்த அறிவாளி. அவரது உடல் முழுவதும் நீருபூசப்பட்டு இருக்கும். நெற்றிக்கண் சேர்த்து முக்கண்ணனாக திகழ்ந்தவர். இரு கைகளில் டமருவும் திரிசூலமும் ஏந்தி மற்ற இரு கைகளால் அபயமும், வரமும் வழங்கும் உருவம் அவருடையது. அவரது நீண்ட முடியில் கங்கை வாசம் செய்கிறாள். அவரது தலையை பிறைச்சந்திரன் அலங்கரிக்கும். புலி அல்லது யானைத் தோலை அவர் ஆடையாக அணிந்திருப்பார். கை காப்பாக, கழுத்தில் பட்டைச்சங்கிலியாக, இடுப்புப் பட்டையாக, மார்பிடை திரிநூலாக பாம்புகள் அவரை அலங்கரிக்கும். கபால மாலையும்

அணிந்திருப்பார். அவருடன் கைலாயத்தில் அவருடைய குடும்ப உறுப்பினர்களும், நந்தியும், சிங்கமும், சுண்டெலியும், மயிலும் ஆகிய அவர் தம் வாகனங்களும் வசிப்பார்கள். அவதாரம் என்றால் இறைவன் மனித உருவில் தோன்றுதல் எனப் பொருள். அவதார மகிமை இந்து சமயத்தின் ஒரு முக்கிய அம்சமாகும்.

விஷ்ணுவின் பத்து அவதாரங்கள் உலகினருக்கு மிக பிரபலமானவை. ஆனால் சிவனின் 25 அவதாரங்கள் அப்படிபட்டனவல்ல. அவை சைவ ஆகமங்களில் பஞ்சவிமிஷாதி லீலாமூர்த்திகள் என குறிப்பிடப்படுகின்றன. அவதாரத்தின் பணி, தவறு செய்பவர்களை அழித்து நன் மக்களை காப்பது ஆகும்.

பேராசிரியர் நஞ்சுண்டதீக்ஷித்,

நூல் ஆசிரியர்.

# பொருளடக்கம்


1. அர்த்தநாரீஸ்வரா
2. பிக்ஷாடனமூர்த்தி
3. சந்தேஷானுக்ரக மூர்த்தி
4. சக்ரதானமூர்த்தி
5. சந்திரசேகரமூர்த்தி
6. தக்ஷிணாமூர்த்தி
7. ஏகபாதமூர்த்தி
8. கஜாரிமூர்த்தி
9. ஹரிஹரமூர்த்தி
10. ஜலந்தரகர மூர்த்தி
11. கல்யாண சுந்தர மூர்த்தி
12. கங்கால மூர்த்தி
13. கிராத மூர்த்தி
14. காலாரி மூர்த்தி
15. காமாரி மூர்த்தி
16. லிங்கோத்பவ மூர்த்தி
17. நடராஜ மூர்த்தி
18. சோமாஸ்கந்த மூர்த்தி
19. சுகாசீன மூர்த்தி
20. திரிபுராரி மூர்த்தி
21. உமாமகேஸ்வர மூர்த்தி
22. வீரபத்ர மூர்த்தி
23. விக்னேஷ்வரானுக்ரக மூர்த்தி
24. விஷாபகர்ண மூர்த்தி
25. ரிஷபாருத மூர்த்தி

# 1. அர்த்தநாரீஸ்வரா

ஸ்லோகம்:

பும்ஸ்த்ரீரூபதரம் தனௌ ஷஷிஜடாடங்காருணாபம் பணிம்
வ்யாக்ரத்வக்வஸனம் ப்ரகோஷ்டவ்ருஷபம்
வக்ராங்கிக் தக்ஷிணே!
வாமே ஷ்யாமவகராத் பலதலகுச
சகெஷௌ மர்ஜுபாதம் புஜம !!

பொருள்:

"ஆண்பாதியாகவும், பெண்பாதியாகவும் காட்சிதரும் ஈசனே, சிரத்தில் சந்திரனையும், கரத்தில் உடுக்கை, பாம்பு இவற்றுடன் சிவந்த உருவத்தை உடையவரும், புலித்தோல் ஆடை அணிந்தவரும், வ்ருஷப வாகனத்தில் அமர்ந்தவரும், வலதுகால் சற்று வளைந்தும், இடது பக்கத்தில் நீல அல்லிப் பூ இதழ் போன்ற முகத்தை உடைய கோபத்தை அளிக்கக்கூடியவரும், பாதத் தாமரைகளை அடையவரும், தங்கத்திலானான ஆபரணங்களால் மிகவும் அழகாக ஜ்வலிப்பவருமான அர்த்தநாரீஸ்வரரை வணங்குகிறேன்."

விளக்கம்:

பரமசிவன், மஹாவிஷ்னு பிற உருவங்கள் பற்றி நாம் ஆகமங்கள் சிற்ப சாஸ்திரங்கள் ஆகியவற்றின் மூலம் அறிகிறோம். அவற்றின் மூலம் மனித மிருக உருவ இணைப்பு (நரசிம்ஹா) மனித-மனித உருவ இணைப்பு (ஹரிகார (அ) சங்கரநாராயண) பெண்-ஆண் உருவ இணைப்பு (அர்த்தநாரீஸ்வரா) ஆகிய நிலைகள் பற்றி அறிகிறோம்.

அத்தகு பல உருவ இணைப்புகளுள் அர்த்தநாரீஸ்வர உருவம் ஒன்றாகும். அந்த உருவத்தில் சிவன் தோன்றினார். அந்த தோற்றத்தில் வலது புறம் சிவன், இடம் புறம் பார்வதி உருவங்கள் இணைவதை காணலாம். ஆணும், பெண்ணும் இணைந்து முழுமை வெளிப்படுவதை இது குறிக்கும். உலகின் இரு துருவ நிலையை இது உணர்த்தும்.

இயற்கையை பெண்ணாக பாவிப்பது மரபு. (பிரகிருதி) ஆண் புருஷன் எனப்படுவான்.ஆணின்றி பெண்ணோ, பெண்ணின்றி ஆணோ ஒளிரவியலாது. சங்க்யா சாஸ்திரத்திலும், பகவத்கீதையிலும் இந்த

(பிரகிருதி-புருஷ)

ஆண்- பெண் இணைப்பை நன்றாக விளக்கிட காணலாம். இயற்கையை பெண்ணாகவும், சிவனை புருஷனாகவும் பண்டைக்கால ரிஷிகள் சித்தரித்தனர். சிவன்-சக்தி பிணைப்பே உயிர் தோன்றக் காரணம் என நம்பினர். அதுவே க்ஷேத்திரம்- க்ஷேத்திராக்னம் எனவும் விவரிக்கப்பட்டது. சிவன்-சக்தி இணைப்பினால் மட்டுமே மகிழ்ச்சி வாழ்வில் இயலும்.

மானுட வாழ்வின் நிலை பற்றி தனது மகிழ்ச்சி குறைவை கூறி, மேம்பாட்டுக்கு வழிவகை செய்யுமாறு பரமசிவனிடம் பிரம்மா வேண்டினார். சிவன், பிரம்மன் முன் தோன்றி அர்த்தநாரீவாராக காட்சி தந்தார். அதன் மூலம் சிருஷ்டியில் ஆண், பெண் இணைப்பின் முக்கியத்துவத்தை உணர்த்தினார். அதுவரை பெண் உருவம் பற்றி பிரம்மா கருதவேயில்லை. உடனே அவர் பார்வதி தேவியிடம் தனக்கு ஒரு பெண் குழந்தை அருளுமாறு வேண்டினார். அது முதல் பிரம்மா தன் சிருஷ்டிப்பணியை சிரமமின்றி செய்யலானார்.

ஆகமங்களில் இது பற்றிய செய்தி ஒன்று உண்டு. ஒரு சமயம் தேவர்களும், முனிவர்களும் கைலாயம் சென்று சிவ-பார்வதிக்கு தங்கள் மரியாதையை செலுத்தி வணங்கினர். அவர்களை வலம் வந்தனர். ஆனால் பிருங்கி முனிவர் மட்டும் வலம் வராது இருந்தார். அவர் கடவுள் சிவன் மட்டுமே என திடமாக நம்பினார். அது பார்வதி தேவிக்கு தனக்கு அவமரியாதை நிகழ்ந்து விட்டது என தோன்றியது. உடனே கோபமுற்று, பிருங்கி முனிவரை சபித்தார். முனிவர் முகம்வெளுத்து கால்களில் பலமிழந்து போனார். அவரால் நிற்க கூட முடியவில்லை. சிவபக்தரான பிருங்கி முனிவர் சிவனிடம் வேண்டிமுறையிட்டார். சிவன் கருணையுடன் முனிவருக்கு தன் ஒரு காலையே வழங்கி உதவினார். இதனை கண்ட பார்வதி மகிழ்ந்து சிவனது உடலில் இணைந்து அர்த்தநாரீஸ்வர உருவத்தில் தானும் பங்கு பெற அவ்வுருவினை சிவன் பெற்றார்.



## 2. பிக்க்ஷாடனமூர்த்தி

ஸ்லோகம்:

சுக்லாபம் சுபலோசனம் டமருகம்

தூவாங்குரம் தக்ஷிர்ணே!

வாமே ஷீலக பாலசம்யுதகரம்

சத்பாதுகம் பாதயோ:!

லம்பத் பிங்கஜடாதரம் ஷஷிதரம் தக்ஷே

ம்ருகம் வாமகே

பிக்ஷா பாத்ரதரஞ்ச குண்டபிட ரம்

பிக்ஷாடணேஷம் பஜ!!

பொருள்:

"வெண்மையான முகத்தை உடையவரும், மங்களமான கண்ணை உடையவரும், வலது கையில் உடுக்கையும், தூர்வா மலரையும் வைத்திருந்தவரும், சூலமும், கபாலத்தையும் உடைய இடது கையை உடையவரும், தொங்குகிற ஜடாமுடியை உடையவரும், சந்திர பிறையை சூடியவரும், வலது கையில் மாலையும், இடது கையில் பிக்ஷா பாத்திரத்தை ஏந்தியவருமான துவண்டுவிடும் ஆடையை அணிந்த பிக்ஷாடன மூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஒரு சமயம் பிரம்மா சிவனுக்கு உரிய மரியாதை தர தவறவும், சிவன் கோபமுற்று தன் நகத்தால் பிரம்மாவின் ஐந்தாவது தலையை கிள்ளி எடுத்தார். ஆனால் அந்த விடுபட்ட தலையோ அவரது விரலை விட்டு விலகவில்லை. அதனால் சிவன் பன்னிரண்டு ஆண்டுகள் தன் கபாலத்தில் பிச்சை பெற்ற உணவை உண்டு உலகை சுற்றி வந்தார். அவர் காசி நகரை அடைந்த போது அந்த பாவத்தில் இருந்து விடுதலை பெற்றாராம் சிவனின் இந்த உருவமே பிக்க்ஷாடனமூர்த்தியாகும்.

ஆகமங்களில் இது வேறுவிதமாக காணப்படுகிறது. இந்துக்களின் வாழ்வில் இமயமலைக்கு சிறப்பாக இடம் உண்டு. இமயத்தை இமயவந்தா எனும் அரசன் ஆண்டு வந்தான். அவன் மனைவி

மீனா, அவர்களுக்கு மூன்று பெண் குழந்தைகள். அபர்ணா (பார்வதி) எகபர்ணா, ஏகபடாலா என்பது அவர்கள் பெயர். அம்மூவரில் அழகியான பார்வதி சிவனை மணக்க விரும்பினாள். சிவனை வேண்டி வரம் கேட்டாள். மனமகிழ்ந்த சிவன் என்ன வரம் வேண்டினாலும் தருவதாக கூற, தன்னை மணக்க வேண்டும் என்றும், அதனை நிறைவேற்ற தன் பெற்றோர் முன் ஒரு பரதேசியாக தோன்ற வேண்டும் எனவும் வேண்டினாள்.

அபர்ணாவின் தந்தை இமயவந்தா வெளியில் சென்று இருந்தபோது சிவன் அவர்கள் வீட்டுக்கு வந்தார். அபர்ணாவின் தாய் பரதேசிக்குத் தர செல்வத்தை ஏந்திவந்தார். ஆனால் சிவன் அவற்றை வாங்க மறுத்து தனக்கு பார்வதியை தர வேண்டினார். வருத்தமுற்ற தாய் சிவனை அங்கிருந்து விரட்ட முயற்சி மேற்கொண்டார். அப்போது வீடு திரும்பிய அரசன் ஹிமாவந்தாவும், தன் மனைவியோடு சேர்ந்து கொண்டு சிவனை விரட்ட முயன்றார். தன் வீரர்களை அப்பணியை முடிக்க பணித்தார். ஆனால் இயலாது போயிற்று. அப்போது சிவன் விஷ்ணுவாகவும், பிரம்மாவாகவும் அவர்களுக்கு தோற்றமளித்தார். ஆச்சரியமுற்ற அரசனும், அரசியும் தன் மகள் பார்வதியை சிவனுக்கு மணமுடிக்க ஒப்புக்கொண்டனர். சிவனும் ஏற்றுக் கொண்டார். ஆதனால் பிக்ஷாடனமூர்த்தி எனப்பட்டார்.



செல்வம் வரும், போகும் ஆனால் நன்னெறி வந்து நிலைக்கும்.

நடத்தை ஒன்றால் உடல் மிளிரும். மக்கட்சேவையும், மகேசன் நாட்டமும் அதன் அழகினை கூட்டிடும்.

இறையருள் சிறந்த காப்பீடு திட்டம். அது நலிவுற்ற காலத்தே குறை நீங்கிட உதவிடும்.

- பாபா

## 3. சந்தேஷானுக்ரகமூர்த்தி

ஸ்லோகம்:

சண்டேஷம் பீதவர்ண
யுக்கரசஹிதம் தக்ஷஹஸ்தேரத டங்கம்
பிப்ராணம் க்ருணசாரம் வரகரஸஹிதம்
பார்வதிவாம பாகம் !
சண்டேஷஸ்யோத்தமாங்கே ப்ரதி நிஹிதகரம்
தக்ஷபாகே த்ரிநேத்ரம் !!
ஸர்வாலங்காரயுக்தம் ஷஷிகலதரம்
கங்கயா யுக்த மீடே !!

பொருள்:

“மஞ்சள் நிறத்தவரும் இரண்டு கைகளை உடையவரும், வலது கையில் உடுக்கையை வைத்திருப்பவரும், மானையும், வரதமுத்ரையையும் உடைய கையை உடையவரும், இடது பாகத்தில் பார்வதியை உடையவரும், சண்டேஸ்வரருடைய உத்தமமான அங்கத்தில் வைக்கப்பட்ட கையை உடையவரும், வலது புறத்தில் எல்லா அலங்காரங்களை உடையவரும், சந்திரப் பிறையையும், கங்கையை அணிந்தவருமான முக்கண்ணாகிய சந்தேஷானுக்ரஹமூர்த்தியை வணங்குகிறேன்.”

விளக்கம்:

சோழர்வம்ச ஆட்சி தென்னிந்தியாவின் புகழ்வாய்ந்த ஆட்சிகாலமாகும். ஸ்கந்தபுரா எனும் நகரம் அப்போது புகழுடன் விளங்கியது. அது மணி ஆற்றங்கரையில் அமைந்து இருந்தது. அந்த நகரில் கல்வியில் சிறந்த பல பிராமணக் குடும்பங்கள் வசித்தன. யக்னதந்தாவும் அவரது மனைவி பவித்ராவும் அங்கே வசித்தனர். அவர்கள் கஷ்யப கோத்ரத்தை சேர்ந்தவர்கள். அவர்களின் மகன் விசாரஷர்மா சிறு வயதிலேயே நல்ல பாண்டியத்யம் பெற்று விளங்கினான். ஒரு நாள் அவன் தன் பயிலும் குருகுலத்திற்கு செல்லும் வழியில் ஒருவன் பசுக்களை குச்சியால் அடித்து துன்புறுத்துவதைக் கண்டான். அதைக் கண்டு வருத்தமடைந்த அவன், பசுக்கள் மிகுந்த மதிப்பிற்குரியவை எனக் கூறி

அவ்வாறு துன்புறுத்த வேண்டாம் எனக் கூறினான். பசுக்கள் மனித இனத்தின் வளர்ச்சிக்கு மிகவும் உதவுவதால் அவ்வாறு துன்புறுத்தலாகாது எனவும் அறிவுறுத்தினான். பசுக்களால் நமக்கு கிடைக்கும் ஐந்து முக்கிய பொருள்கள் (பஞ்ச கவ்யம்) பற்றியும் விளக்கினான். அவை பால், தயிர், நெய், சாணி, மூத்திரம் ஆகியன. அன்றிலிருந்து தன் வீட்டு பசுக்களை தானே கவனித்துக் கொண்டான். தினமும் அவற்றை மேய்ச்சலுக்கு அழைத்துச் சென்று வர ஆரம்பித்தான். அவன் அவைகளிடம் காட்டிய அன்பால் பலன் கூடியது. பின் சில நாட்களில் மணலில் லிங்கம் ஒன்றினை செய்து அதற்கு பால், பூ கொண்டு பூசை செய்யத் தொடங்கினான். அதுவே அவனது அன்றாட பழக்கமாகிவிட்டது.

ஒரு நாள் வேலைவிட்டு விலகிய மாடுமேய்த்தவன், விசார சர்மா லிங்கத்துக்குச் செய்யும் பூசைக்கு பாலினை பயன்படுத்துவதைக் கண்டான். அது பற்றி கிராமத்து மக்களுக்கு தவறான ஒரு செய்தியை அனுப்பினான். அவர்கள் அச்செய்தியை விசார சர்மாவின் தந்தைக்கு தெரிவித்தனர். கோபமடைந்த அவனது தந்தை, மேய்ச்சல் காட்டுக்கு நேரில் சென்றார். அங்கு நடைபெறுவதை கண்டு அதற்காக தன் மகனை தண்டித்தார். அதனால் கோபமடைந்த மகன் தன் கையில் ஒரு குச்சியை எடுத்து தன் தந்தையை அடிக்கத் தொடங்கினான். அப்போது அக்குச்சி ஒரு கத்தியாக மாறி, அவன் தந்தையின் ஒரு காலினை வெட்டி விட்டது. சிவ பூசைக்கு இடையூறு செய்ததால் அவருக்கு அக்கதி ஏற்பட்டது. இது சிவனிடம் மகனுக்கு உள்ள பக்தியின் ஆழத்தை உணர்த்தியது. சிவனும், பார்வதியும் ரிஷப வாகனத்தில் விசார சர்மாவின் முன் தோன்றி அவனது பக்தியை மெச்சினர். சிவன் விசார சர்மாவுக்கு "சந்தேசா" என திருநாமம் சூட்டி மகிழ்ந்தார். அவனை தன் அவதாரமாக அறிவித்து அவனையும் தன்னுடன் கைலாயத்துக்கு அழைத்துச் சென்றார். அவன் தந்தையும் மன்னிக்கப்பட்டார். இப்படி சிவன் சந்தேசானுக்கிரகமூர்த்தி ஆனார்.



## 4. சக்ரதானமூர்த்தி

ஸ்லோகம்:

விஷ்ணுஸ்த்வீஷபுர: ஸ்திதோரஞ்ஜலிகர:
தேவஸ்ய பாதாப்ஜயோ !
சன்ஸ்தாப்யாக்ஷில சத்சஹஸ்ர கமலம்
சப்ராய்தவான் அஷ்வராத் !
யஸ்மாஞ்சக்ரமதேர் வரம் பசுபதிம்
பத்மாக்ஷ இத்யாக்யயா
டங்கம் க்ருஷ்ண ம்ருகம் வரம் பரகராத்
சக்ரப்ரதம் த் பஜே !!

பொருள்:

"ஈசனின் முன்பு கைகூப்பிய நிலையில் இருந்து அவரது பாத கமலங்களில் தன் கண்களை வைத்து ஒளிருகின்ற ஆயிரம் தாமரைகளை ஈஸ்வரனிடம் அடைந்த விஷ்ணு அவரிடமிருந்து சக்ரத்தை பெற்று கமலக்கண்ணன் என்ற பெயரையும் பெற்றவரும், ஒரு கையில் உடுக்கை, மற்றொரு கையில் சக்கரத்தை ஏந்தியவருமான சக்ரதான மூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஒரு சமயம் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் சண்டை ஏற்பட்டு அதில் தேவர்கள் தோல்வி அடைந்தனர். அரக்கர்களிடமிருந்து தங்களை காத்தருளுமாறு தேவர்கள் மகாவிஷ்ணுவிடம் வேண்டினர். மகாவிஷ்ணு அதைச் செய்வதற்கு தன்னிடம் இருந்த ஆயுதங்கள் போதாது எனக் கருதினார். அவர் பரமசிவனின் உதவியை நாடி வணங்கிட முடிவு செய்தார். விஷ்ணுவும், தேவர்களும் சிவன் பெயரை உச்சரித்துக் கொண்டு தீயின் நடுவில் அமர்ந்து வேண்டுவது என முடிவு செய்தனர்.

சிவனிடம் ஏதும் பலன் பெற இயலவில்லை. விஷ்ணு உடனே ஆயிரம் தாமரை மலர்களை சிவனுக்கு அர்ப்பணித்து ஆயிரம் நாம ஜபம் செய்வது என முடிவு செய்தார். உடன் தன் பூசையை துவங்கினார். சிவன் அவரை சோதிக்க எண்ணி, ஒரு தாமரை பூவினை மறைத்து விட்டார்.

விஷ்ணு 999 மலர்களை அர்ப்பணித்த பின் ஒரு மலர் குறைவதை கண்டார். உடனே சிறிதும் தயக்கமின்றி கமலக்கண்ணான விஷ்ணு, தன் கண் விழிகளில் ஒன்றினை பிடுங்கி சிவனின் பாதங்களில் சமர்ப்பித்து தன் சங்கல்பத்தை முடித்தார். அதை கண்டு மிகவும் மகிழ்ச்சியுற்ற சிவனிடம் விஷ்ணு தனது கவலையை விளக்கி அசுரர்களை வென்றிட தனக்கு ஒரு சிறந்த ஆயுதத்தை அளித்தருள வேண்டினார். சிவன் மகிழ்ந்து விஷ்ணுவுக்கு சுதர்ஷன சக்கரத்தை அருளி உதவினார். விஷ்ணு தனக்கு கிடைத்த சுதர்ஷன சக்கரத்தினால் அசுரர்களை வென்று உலகில் அமைதி நிலவ உதவினார். சிவன் சக்ரதானமூர்த்தி ஆனார்.



வாழ்க்கைத்தரத்தை விட வாழ்க்கை முறையே முக்கியமானதாகும்.

உள்மனது உந்திட, அன்புடன் ஆற்றும் சேவையே சிறந்தது.

மானுட சேவை ஒன்றே மகேசனின் சேவைக்கு வழி.

ஒரு மாணவன் தவறினால் அவன் மட்டும் பாதிக்கப்படுகிறான். ஒரு ஆசிரியர் தவறுவது நூற்றுக்கணக்கான மாணவரை பாதிக்கும்.

உன்னை நீ நம்பு. பின் இறைவனை நம்பு. இரண்டும் இயன்றிடின் உன்னை நல்லதும், கெட்டதும் எப்போதும் பாதிக்காது.

நாடு நலம் பெற, நாம் உடலை பேணி, மனதை வளப்படுத்தி, வாழ்வினை சீர்படுத்தலே சிறந்த வழி.

\- பாபா

## 5. சந்திரசேகரமூர்த்தி

ஸ்லோகம்:

அபயவரதஹஸ்தம் சௌம்யச்ருங்கார பாவம்
விபுலவதன நேத்ரம் சந்த்ர பிம்பாங்கமௌலிம்!
ருஜீதனுஸமபாதஸ்தானம் வித்ருமாபம்
பரஷீஹரிணபாணிம் பத்மபீடோபரிஸ்தம் !!

பொருள்:

"அடைக்கலம் தருகின்ற கைகளையும், அழகான நளினமானவரும், அகண்ட கண்களையுடைய முகத்தையும், நிலவின் ஒளியைப் போன்றவரும், அழகான உடல் வாகையும், அனைவரிடமும் அன்பைப் பொழிபவரும், கோடாரியையும், மானையும் கையில் கொண்டு தாமரை பீடத்தில் அமர்ந்தவரைப் போற்றுவோம்."

விளக்கம்:

தக்ஷ பிரம்ம பிரஜாபதியின் ஆயிரம் மகன்கள் நாரதரின் உதவியால் மோட்சம் அடைந்தனர். தக்ஷனின் முப்பத்திமூன்று பெண் குழந்தைகள் தர்மர், பிருகு போன்ற பல முனிவர்களின் தர்மபத்தினிகள் ஆயினர். அவர்கள் அனைவரும் மிக மகிழ்ச்சியாக வாழ்வு வாழ்ந்தனர். மேலும் தக்ஷன் அஸ்வின், பரணி என இருபத்தி ஏழு பெண்களை உருவாக்கினார். மிக அழகான அவர்களுக்கு அழகான சந்திரனை மணவாளனாக்கி மகிழ்ந்தார். சந்திரன் ரோகினியிடம் மிக அன்பாக இருந்தார். இதனை பொறுக்காத மற்ற 26 மனைவியரும் தங்கள் தந்தையிடம் முறையிட்டனர். ஏமாற்றமடைந்த தக்ஷன் சந்திரனை சபித்தார். கவலையடைந்த சந்திரன் இந்திரனின் உதவியை நாடினான். இந்திரன் பிரம்மாவின் உதவியை நாடுமாறு கூறினார். பிரம்மா தன் இயலாமையை உணர்ந்து - மகேஸ்வரனின் உதவியை நாடுமாறு யோசனை அளித்தார். நந்தியின் உதவியால் சந்திரன் கைலாயத்தை அடைந்தார். அங்கு சிவனிடம் பணிந்து வேண்டியனார். சிவன் சந்திரனின் நற்பண்புகளை பாராட்டி, அவரை தன் தலையில் அமர்த்தி மகிழ்ந்தார். இதன் பின் சிவபெருமான் சந்திரசேகரமூர்த்தி என துதிக்கப்பட்டார்.



## 6. தக்ஷிணாமூர்த்தி

ஸ்லோகம்:

ஸ்படிகசத்ருஷ வர்ணம் மௌக்திகிமக்ஷமாலாம்
அம்ருதகலஷ ஹஸ்தம் ஞானமுத்ராம் கராக்ரை !
ததித்முரக் ஹஸ்தம் சந்த்ரசூடம் த்ரிநேத்ரம்
ப்ரணமத குருமூர்த்தி தக்ஷிணாமூர்த்தி தேவம் !!

பொருள்:

"ஸ்படிகத்தைப் போன்ற நிறத்தை உடையவரும், முத்துக்களால் ஆன அக்ஷ மாலையை உடையவரும், அம்ருத கலசத்தை கையில் ஏந்தியவரும், ஞான முத்திரையை கையின் நுனியில் கொண்டவரும், பாம்பைக் கையில் பிடித்திருப்பவரும், சந்திர பிறையைச் சூடியவரும் மூன்று கண்களை உடையவருமான குருவடிவானவருமான தக்ஷிணாமூர்த்தியை வணங்குவோம்."

விளக்கம்:

இறைவன் ஒருவரே மனித குலத்தை காப்பாற்றிட வேண்டி அவர் பல உருவங்களை மேற்கொண்டார். எல்லா பலன்களும் ஒருங்கமைந்த சதாசிவன் தன்னுடைய மூன்று முக்கிய பொறுப்புகளான ஆக்குதலை பிரம்மாவிற்கும், காப்பாற்றுதலை விஷ்ணுவிற்கும், அழித்தலை மகேஷ்வரனுக்கும் பகிர்ந்தளித்தார். நாம் நன்கு அறிந்த பத்து அவதாரங்கள் மூலம் விஷ்ணு தன் பணியை சிறக்கச் செய்தார். அதேபோன்று சிவனும் இருபத்தி ஐந்து அவதாரங்கள் மூலம் தன் பணியை சிறக்கச் செய்தார். அது பற்றி நாம் அதிகம் அறிந்ததில்லை. அந்த சிவ அவதாரங்கள் பற்றிய அரிய செய்திகள் ஆகமங்கள், புராணங்கள் சிற்ப சாஸ்திரங்கள் ஆகியவற்றில் பரவலாக காணப்படுகின்றன. அவை சிவாகமத்தில் "பஞ்சவிம்ஷாடி லீலாமூர்த்திகள்" என குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆகமங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பல சிவ உருவங்களில் ஒன்று தட்சிணாமூர்த்தி உருவமாகும். தனது மாணவர்களுக்கு போதிக்கையில் அவர் தெற்கு திசை நோக்கி அமர்ந்து உள்ளதால் தட்சிணாமூர்த்தி என அழைக்கப்பெற்றார். அவர் அமர்ந்திருந்த இடம் இமயமலையில்

உள்ளதாகும். 'தட்சிணா' என்றால் அறிவு எனும் ஒரு பொருளும் உண்டு. தட்சிணாமூர்த்தி அறிவின் திருவுருவம் ஆகும்.

ஒரு சமயம் இமயத்தின் அரசன் இமயவந்தனின் மகளான பார்வதி தான் தவம் செய்யப்போவதாக கூறினாள். அதற்கென கௌரி சங்கர் சிகர உச்சியை அடைந்தார். அந்த சமயத்தில் சிவன் ஏஜடசாலா சிகர உச்சியில் சங்கா மற்றும் பிற முனிவர்களுக்கு 'திரிபடர்தா'வின் முக்கியத்துவம் பற்றி போதித்துக்கொண்டு இருந்தார். அவர்களுக்கு போதனை விளங்காததால் சிவநாமத்தை ஜபித்தபடி மோட்சம் அடைய முடிவு செய்தனர். சிவன் மகிழ்ந்து அவர்கள் முன் தோன்றினார். அப்போது சிவன் தெற்கு திசை நோக்கி இருந்தால் தட்சிணாமூர்த்தி என அழைக்கப்படுகிறார். தட்சிணாமூர்த்தியின் தரிசனம் ஒன்று கிட்டினால் தாங்கள் அடிமைத்தளையிலிருந்து விடுபட்டு, சலனமற்ற அமைதியான நிலையை அடையலாம் என அம்முனிவர்கள் கருதினர். இதுவரை அவர்களால் அறிந்துகொள்ள இயலாத பல விஷயங்கள் அவர்களுக்கு தெளிவாயின. விளங்காமல் இருந்த 'திரிபடர்தா' பற்றியும் தெளிவு பெற்றனர். சிவனது ஆட்சிக்கு உட்பட்ட சூரிய, சந்திர, அக்னி சக்திகளின் அனைத்து செய்திகளும் தெளிவாக புரிந்தது. பின் சிவன் தட்சிணாமூர்த்தி உருவில் தவமியற்றிடும் இடத்தை அடைந்தனர். அந்த காட்சியை கண்டமாத்திரத்தில் வீடு பேறு அடையும் வழி தெரிந்தது. அதன் பின் தேவர்கள் அனைவரும் கைலாயம் சென்று தட்சிணாமூர்த்தியை தரிசித்தனர்.

தந்திர சாஸ்திரத்தில் சம்ஹார தட்சிணாமூர்த்தி, யோக தட்சிணாமூர்த்தி, வீணாதார தட்சிணாமூர்த்தி, ஞானதட்சிணாமூர்த்தி, மேதா தட்சிணாமூர்த்தி என பல குறிப்புகள் உள்ளன. குரு, ஞானம் இவற்றின் திரு உருவம் தட்சிணாமூர்த்தியாம்.



# 7. ஏகபாதமூர்த்தி

ஸ்லோகம்:

ஏகமூர்த்தி தரமேக பாதகம்
ஷீலடங்கவரதா பயான்விதம்!
காலகண்டமதி பீஷணம் சிவம்
லோகபூஜித பதம் பஜாம்யஹம் !!

பொருள்:

"ஒரு காலை பூமியில் வைத்திருப்பவரும், ஆலம், டாமரம், வரத, அபய முத்திரைகளை உடையவரும் கறுப்பான கழுத்தை உடையவரும், மிகவும் பயங்கரமானவரும், உலகத்தோரால் பூஜிக்கப்படுபவருமான ஏகபாதமூர்த்தியை வணங்குவோம்."

விளக்கம்:

கடவுள் பல நேரங்களில் ஏகபாதமூர்த்தி என அழைக்கப்படுகிறார். பிரபஞ்சம் இறைவனின் இல்லம் என்பது இதன் பொருள். இது சிவன், விஷ்ணு இருவரையும் குறிப்பதாகும். ரிக்வேதத்தில் சிவனுக்கு அஜய்க்கபாதா என ஒரு பெயர் உண்டு.

திரிமூர்த்தி உருவத்தில் பிரம்மா, விஷ்ணு, மகேஷ்வர் ஆகிய மூவரது உருவங்கள் உண்டு. வேறுபாடு ஏதுமின்றி மகேஷ்வரனுக்கு படைப்பில் உள்ள அனைத்து பிரிவுகளிலும் பக்தர்கள் உண்டு. ஆழ்ந்த பக்தி உள்ள அனைவரையும் சிவன் ஆசிர்வதிப்பார். சத்யோஜதா, வாமாதேவா, அகோரா, தத்புருஷா, ஈஷான, கந்தா, வினாயகா, வீரபத்ரா, நந்தி ஆகிய அனைத்து கடவுளர்களும் சிவனின் பல்வேறு உருவங்களே என நம்புபவர் பிருங்கி முனிவர். சிவனைத்தவிர வேறு உருவங்களை கடவுள் என ஒரு போதும் தொழாதவர்.

ஒரு சமயம் சிவனும், பார்வதியும் கைலாயத்தில் அமர்ந்து இருந்தனர். சிவனுக்கு வணங்கி, பக்தி செலுத்திட அங்கு பிருங்கி முனிவர் வந்தார். சிவனை மட்டும் வலம் வந்து தொழ விரும்பி, ஒரு வண்டாக உருவெடுத்து சிவனின் கால்களை மட்டும் சுற்றி வந்தார். இதனை கண்ட பார்வதிக்கு கோபம் உண்டாயிற்று. தன்னை அவமதித்த

பிருங்கி முனிவரை சபித்தார். அதனால் முனிவரின் கால்கள் வலுவிழந்தன. தன் கால்களில் வலு சேர்க்குமாறு முனிவர் சிவனை வேண்டினார். கருணையுடன் சிவன் தன் பக்தனுக்கு தன் கால்களில் ஒன்றினை வழங்கினார். இதனால் பிருங்கி முனிவர் மூன்று கால்களை பெற்றார். சிவன் ஒரு காலினை இழந்து ஏகபாதமூர்த்தி ஆனார்.



மனிதன் இறையின் மறு வடிவம்.

யமன் தன் வருகையை அறிவிப்பதில்லை. அவர் உன்னை படம் பிடிப்பவர் போல், நீங்கள் தயாரா என வினவமாட்டார்.

வீட்டில் விளக்கு ஏற்றுவது போல், உள்உறையும் இறைவனை உன் இதயத்தில் வை.

நம்முள் இறையுணர்வு மிக வாழ்தலே வாழ்வு.

கல்வியினால் நாம் பெரும் சிறந்த பரிசு நன்னடத்தையே.

வாழ்க்கை ஒரு சவால்: எதிர்கொள்க, வாழ்க்கை ஒரு கனவு: நினவாக்குக, வாழ்க்கை ஒரு விளையாட்டு: விளையாடுக, வாழ்க்கை அன்பே : பயின்று மகிழுங்கள்.

உங்கள் மனதை பலன்களுக்கு அடிமையாக்காமல், இறைவனுக்கு அடிமையாக்குங்கள்.

உண்மை கல்வி உயிர் வாழ மட்டுமல்ல. அதை முழுமையாக அர்த்தமுள்ளதாக அமைக்கவே.

- பாபா

## கஜாரிமூர்த்தி



## 8. கஜாரிமூர்த்தி

ஸ்லோகம்:

வ்யக்ஷம் சாந்தம் ப்ரசன்னம் சசிதரமுகுடம்
குண்டலோத் பாசிகர்ணம் !
ஹஸ்தை கபாலம் த்ரிசிகதஹன
சர்வாங்குஷம் சாவஹன்தம் !
பாலாகாரம் சுவேஷம் தருணரவினிபம்
சீக்ரமுத்தின்னஹஸ்தி
க்ரோடாமத்யஸ்த் ஹஸ்தத்தித்மத்
பஜே சாஷ்டஹஸ்தம் கஜாரிம் !!

பொருள்:

“விசேஷமான கண்ணை உடையவரும், அமைதியானவரும், ப்ரசன்னமானவரும், சந்திரபிறை சூடிய மகுடத்தை உடையவரும், குண்டலங்களால் ப்ரகாசிக்கிற காதுகளை உடையவரும், கைகளில் கபாலம் முப்புரத்தையும் எரிக்க வல்ல அங்குசம் முதலியவைகளை வைத்திருப்பரும், சிறு பாலகனின் உருவத்தை உடையவரும், இளஞ்சூரியனின் நிறத்தை ஒத்தவரும், யானையின் மத்தங்களை விரைவில் பிளக்கக்கூடியவரும், எட்டு கைகளை உடையவரும், இருகைகளையும் மார்பின் நடுவில் வைத்திருப்பவரும், யானையை எதிரியாகக் கொண்ட மூர்த்தியை வணங்குகிறேன்.”

விளக்கம் :

கஜாசூரன் மிகக் கொடுரமான மகிஷாசூரனின் புத்திரனாகும். மகிஷாசூரனை வதம் செய்தது துர்கையாகும். மஹிஷமர்தினி என்றும் அவருக்கு பெயருண்டு. தந்தை இறந்ததும் தனயன் கஜாசூரன் அரசனாக அமர்ந்தான். தன் தந்தையின் சாவிற்கு பழிவாங்க நினைத்தான். அதற்கான பலம் பெற வேண்டி, கானகம் சென்று பிரம்மதேவனை வழிபட விழைந்தான். அவனது தவத்தை ஏற்று, பிரம்மன் அவனுக்கு வரம் ஒன்றினை அளித்தான்.

அதனால் தன் முகத்தில் படர்ந்த மிக அதிகமான ஒளிக்கதிர்

அவனது நெற்றியிலிருந்து கிளம்பிச் சென்று தேவர்களை துன்புறுத்தியது. இந்திரனும், தேவர்களும் பயமுறுத்தப்பட்டனர். உடனே அவர்கள் பிரம்மனை அணுகி அவ்வொளியின் சூட்டிலிருந்து தங்களை காப்பாற்றுமாறு வேண்டினர். உடனே கஜாசூரன் நெற்றியிலிருந்து கிளம்பி தேவர்களை துன்புறுத்திய ஒளிப்பிழம்பு மறைந்தது. கஜாசூரனும் தனது தபசை தொடர, அதனால் மகிழ்ந்த பிரம்மா வேண்டும் வரத்தை அருளுவதாக கூறினார். உடனே எவராலும் தனக்கு மரணம் ஏற்படக்கூடாது என வேண்டி வரம் கேட்டான். மேலும் சூரியனின் ஆட்சிக்குட்பட்ட உலகில் அனைத்தையும் அடக்கியாளும் பலத்தையும் தனக்கு அருளுமாறு வேண்டினான். பிரம்மன் அவன் கேட்ட அனைத்தையும் அருளி மகிழ்ந்தார்.

தான் பெற்ற வரங்களின் பலம் கொண்டு, தேவர்களை துன்புறுத்தி அவர்களின் இடத்தை கஜாசூரன் அபகரிக்கத் தொடங்கினான். அவன் காசி நகருக்கு சென்று அங்கிருந்த சிவபக்தர்களுக்கு தொல்லை தரத் துவங்கினான். இதனால் சிவன் கோபமடைந்தார். கஜாசூரனை தண்டிக்க விரும்பினார். சிவனை நோக்கி கஜாசூரன் செலுத்திய ஆயுதங்கள் அனைத்தும் அழிக்கப்பட்டன.

சிவனின் திரிசூலம் கஜாசூரனின் உடலை துளைத்தது. கஜாசூரனின் உடலை தன் தலைக்கு மேல் சிவன் தூக்கிட தன் முடிவு நெருங்கியதை கஜாசூரன் உணர்ந்தான். உடனே கஜாசூரன் சிவனை பக்திபூர்வமாக வணங்கிடவும், மனமகிழ்ந்த சிவன் அவனுக்கு வேண்டும் வரம் தர விழைந்தார். அவன் தன் தோலை சிவன் ஆடையாக அணிய வேண்டினான், அதுமுதல் சிவன் 'கஜசர்மாம்பாதாஜா' ஆனார். சிவன் 'கிருத்திவாசா' எனவும் அழைக்கப்பட்டார். அந்த இடத்தில் சிவலிங்கம் ஒன்று 'கிருத்திவாசேஸ்வரா' எனும் பெயரில் சிவனால் அமைக்கப்பெற்றது. அது முதல் சிவன் கஜாரி (கஜசம்ஹார) மூர்த்தி ஆனார்.



## 9. ஹரிகரமூர்த்தி

ஸ்லோகம்:

சர்வாங்கே வித்ருமாபம் சசித்ரமகுடம்
பஸ்மருத்க்ஷ புஷம்
வாமாங்கே ஷ்யாமலாபம் மணிமகுடயுதம்
பீதவஸ்த்ராதி ஷோபம்!
ஸவ்யே டங்காப்யே சததத்மத
பரே ஷங்ககௌமோதகீம் ச
கிஞ்சில்லலாடநேத்ரம் ஹரிஹரவ புஷம்
சந்ததம் நௌமி ஷம்பும் !!

பொருள்:

"வலதுபுறத்தில் அங்கோல மரத்திலான உருவத்தை ஒத்தவரும், சந்திரபிறை சூடிய மகுடத்தை உடையவரும், விபூதியாலும், ருத்ர மாலையினாலும் அலங்கரிக்கப்பட்டவரும், இடது புறத்தில் கறுப்பு நிறத்தில் ஜ்வலிப்பவரும், மணிகளால் ஆன மகுடத்தை தரித்திருப்பவரும், மஞ்சள் நிற வஸ்திரத்தால் அழகாக ப்ரகாசிப்பவரும், வலது கையில் தங்கம் மற்றும் முத்திரையுடன் கூடிய அபயஹஸ்தத்தை உடையவரும், மற்றொரு கையில் சங்கு மற்றும் கௌமோதக் என்ற கதையை வைத்திருப்பவரும், சிறிதே பாதி திரண்ட நெற்றிக் கண்ணை உடையவருமான ஹரிஹர ரூபத்தை உடைய சம்புவை எப்போதும் வணக்குகிறேன்."

விளக்கம்:

கடவுள் ஒருவரே, அவரை பல உருவங்களாக பல பெயர்களில் வணங்கலாம். அனால் இது பல பக்கதர்களால் முழுதும் மறக்கப்படுகிறது. இதனால் சமூகத்தில் அமைதி கெட்டு பல சண்டை சச்சரவுகள் முளைக்கின்றன. எனவே நமது முனிவர்கள் சமாதானம் கூடிட, ஒற்றுமை ஏற்பட முயன்ற வண்ணம் உள்ளனர். இது பழங்கால முதல் இன்று வரை தொடர்கிறது.

ஹரிஹரன், அர்த்தநாரீஸ்வரன், நரசிம்மன் போன்ற உருவங்கள் இந்த ஒருமைப்பாட்டை உணர்த்துவன. சங்கரநாராயணன் அல்லது

ஹரிஹரன் உருவம் வலது புறத்தில் சிவ உருவமும் (ஹர) இடதுபுறத்தில் விஷ்ணு உருவமும் (ஹரி) இணைந்தது.

விஷ்ணுவிடம் தேவர்கள் சிவனைப் பற்றி கேட்டபோது அவர் ஹரிஹரறாக தோன்றி விளக்கமளித்தார். மற்றோரு விளக்கமும் உண்டு. குகாசூரன் பிரம்மாவிடம் ஒரு வரம் பெற்றான். அதன்படி அவனை சிவனோ அல்லது விஷ்ணுவோ கொல்ல முடியாது. அந்த வரம் பெற்ற அவன் தேவர்களுக்கு மிகுந்த தொல்லை தரத் துவங்கினான். அவனை வதம் செய்யவே சங்கர நாராயணனாக தோன்றி அவர்கள் அவனை வதம் செய்தனர்.

சைவர்களும், வைணவர்களும் தம்முள் மிகவும் சண்டையிட்டுக் கொள்ள அவர்களுக்கான ஒரு விளக்கமும் இதுவே.

சிவனும், விஷ்ணுவும் வேறுவேறல்ல. ஒரே சக்திகளே என நிறுவிட வந்த மூர்த்தியே ஹரிஹரமூர்த்தி.

சிவரூபமும், விஷ்ணு ரூபமும் ஒன்றே. சிவ ஹ்ருதயமும், விஷ்ணு ஹ்ருதயமும் ஒன்றே என்பதை உணர்த்துவது இம்மூர்த்தியே.



எத்தனை வருத்தமும், கஷ்டமும் வாழ்வில் வந்தாலும் இறைநினைவு அதனை எளிதாக்கிவிடும்.

மனிதனின் மனம் தூய்மையானால் உலகம் தூய்மையாகிவிடும்.

இறைவன் கொடை நிலையானது. மனிதன் தருவது நிலைக்காது.

- பாபா

## 10. ஜலந்தரஹரமூர்த்தி

ஸ்லோகம்:

ரக்தாபமுக்ர நயனம் த்விபுஜம்ச த்ரிநேத்ரகம்
உபவீத சமாயுக்தம் சர்வாலங்காரம் ஷோபிதம் !
பாதே பாதுக சம்யுக்தம் கிஞ்சித்வைக மனோன்முகம்!
தக்ஷ ஹஸ்தே ஸ்திதம் சத்ரம் வாமே பூர்ண கமண்டலம் !!
கர்ண குண்டல சம்யுக்தம் ஹாரநூபுர சம்யுதம் !!

பொருள்:

"சிவந்த பயங்கரமான கண்ணை உடையவரும், இரண்டு கைகளை உடையவரும், மூன்று கண்களை உடையவரும், உபவீதத்தை அணிந்திருப்பவரும், எல்லா அலங்காரங்களிலும் அழகாகக் காணப்படுவரும், காலில் பாதுகைகளை உடையவரும், வேகமாக முன்னோக்கிக் செல்லக்கூடிய மனதை உடையவரும், வலது கையில் குடையை உடையவரும், இடது கையில் நிரம்பிய கமண்டலத்தை உடையவரும், காதுகளில் குண்டலங்களோடு கூடியவரும், மாலை மற்றும் கொலுசு அணிந்தவருமான ஜலந்தரஹரமூர்த்தியை வணங்குகிறோம்."

விளக்கம்:

ஒரு சமயம் இந்திரனும், பிரஹஸ்பதியும் சிவனைக்கான கைலாயம் சென்று கொண்டு இருந்தனர். வழியில் ஒரு தாடியும், வளர்முடியும் கொண்ட வயோதிகர் அவர்களை கண்டார். அவரிடம் இந்திரனும், பிரஹஸ்பதியும் சிவன் எங்குள்ளார் என வினவினர். அவ்வயோதிகர் பதில் ஏதும் கூறவில்லை. அதனால் கோபமுற்ற இந்திரன், அவ்வயோதிகரை தண்டிக்க தனக்கு பிடித்தமான வஜ்ராயுதத்தை எடுத்தார். அவ்வயோதிகர் சிவனே என்பதால் இந்திரனுக்கு இது இயலவில்லை. சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து மிக பிரகாசமான ஒளிக்கற்றை தோன்றி இந்திரனை நோக்கிப் பாய்ந்தது. எதிரில் இருக்கும் வயோதிகர் சிவனே என்றுணர்ந்த பிரஹஸ்பதி, இந்திரனை மன்னிக்குமாறு சிவனிடம் வேண்டினார். உடனே அந்த ஒளிக்கற்றை இந்திரனை விட்டு விலகி உப்புக்கடலில் விழுந்து மறைந்தது. கடலிலிருந்து ஒரு குழந்தை தோன்றியது. உடனே பிரம்மா அந்தக் குழந்தையை எடுத்து தன் மடியில் வைத்துக்கொண்டு அதன்

எதிர்காலம் பற்றி கூறலானார். அந்த பலம் பொருந்திய குழந்தை மிகவும் அழுத்தமாக பிரம்மாவின் கழுத்தை நெறுக்கிப்பிடித்திட பிரம்மாவின் கண்களில் நீர்தளும்பிற்று. அக்குழந்தை 'ஜலந்தரா' என அழைக்கப்பட்டது. பிரம்மா அக்குழந்தை மிக பலசாலியாக வளர்ந்து அசுரர்களின் தலைவனாகும் என்றார். இறுதியில் பிரம்மா, விஷ்ணு ஆகியோரையும் அக்குழந்தை வென்றுவிடும் என்றும் பிரம்மா கூறினார். சிவனைத் தவிர எவராலும் அக்குழந்தையை வெல்ல முடியாது என்றும் அவர் கூறினார். மேலும் ஜலந்தரா கலமேனியின் மகள் விருந்தாவை மணம் முடிப்பார் எனவும் கூறினார். அசுரர்களின் குருவான சுக்ராச்சாரியாரிடம் அக்குழந்தையை பிரம்மா ஒப்படைத்து அக்குழந்தையை அசுரர்களின் அரசனாக ஆக்குமாறும் கூறினார். சுக்ராச்சாரியாரின் பராமரிப்பில் வளர்ந்து அக்குழந்தை பின்னாளில் அசுரகுல அரசனாகியது.

பிரம்மாவும் மற்றவர்களும் அங்கிருந்து வைகுந்தம் சென்று நடந்தவற்றை விஷ்ணுவிடம் கூறினர். விஷ்ணு, இந்திரன் இருவரும் பிறருடன் இணைந்து ஜலந்தராவை அழிக்க முனைந்தனர். அவர்களுக்கு தோல்வியே கிட்டியது. ஆனாலும் தன் எதிரியின் வீரத்தை மெச்சிய விஷ்ணு, லட்சுமியோடு ஜலந்தராவுடன் தங்கியிருக்க விழைந்தார். ஜலந்தராவை விஷ்ணுவுக்கும், லட்சுமிக்கும் மிகவும் பிடித்துப்போயிற்று.

ஏமாற்றமடைந்த தேவர்கள் சிவனிடம் சென்று நடந்ததை விளக்கி கூறினார். சிவன் நாரதரை அழைத்து தனக்கும், ஜலந்தராவுக்கும் இடையில் மனக்கசப்பு உண்டாகுமாறு செய்திட கூறினார். அதன்படி நாரதர் ஜலந்தராவிடம் சென்று பார்வதி தேதியின் அழகினை மிகவும் புகழ்ந்து பேசி அத்தகைய அழகியை அபகரிக்க முயலும் படி ஜலந்தராவை ஊக்கப்படுத்தினார். மனம் மயங்கிய அவன், தன் உதவியாளன் ராகுவை அழைத்து, சிவனிடம் சென்று சிவன் தனது அனைத்து செல்வங்களையும் உடன் பார்வதியையும் சேர்த்து தன்னிடம் ஒப்படைக்க வேண்டும் என கூறி வருமாறு பணித்தான். ராகுவின் அச்சொற்களை கேட்ட சிவன், மிக கோபமானார். உடனே கீர்த்திமுகி எனும் பலசாலியை தோற்றிவித்து ராகுவை மிரளச்செய்தார். ராகு தன்னை மன்னித்து விடும்படி சிவனிடம் வேண்டினார்.

பின் ராகு ஜலந்தரவிடம் சென்று நடந்ததை விளக்கினார்.

மனமுடைந்த ஜலந்தரா சிவனோடு சண்டையிட முடிவு செய்தார். வழியில் சுக்ராசாரியார் சண்டை வேண்டாம் என்று ஜலந்தராவுக்கு அறிவுரை கூறினார். அதனை பொருட்படுத்தாமல் சண்டைக்கு தயாரானார் ஜலந்தரா. தேவர்களும் சிவனிடம் முறையிட்டிருந்தனர். சிவனது படைகள் ஜலந்தராவின் பல வீரர்களை கொன்றன. எனினும் சுக்ராசாரியார் அவர்களை உயிர்ப்பித்துக் கொண்டே இருந்தார். அதனால் கோபமுற்ற சிவன் சுக்ராச்சாரியாரை அழித்தார். இதனிடையே ஜலந்தராவின் படைகள் கடனூசா, ஷண்முகா, நந்தி ஆகியோரின் படைகளை வென்றன. ஆனால் ஜலந்தராவின் பக்கமும் காலநேமி சும்பா, நிசும்பா ஆகியோர் தலைமையில் சென்ற படைகள் தோல்வியுற்றன. இதன் பிறகும் ஜலந்தராவின் படைகள் சிவனை நெருங்கின.

நந்தி வாகனத்தில் சிவன் ஜலந்தராவை நோக்கி சென்றார். தேவர்களும் சிவனோடு சேர்ந்து கொண்டனர். ஜலந்தராவின் படைகள் தோற்றன. தன் இயலாமையை உணர்ந்த ஜலந்தரா சிவனாக மறு உருவம் ஏந்தி, பார்வதியை நெருங்கினான். ஆனால் பார்வதியை கண்டதும் பயந்து போனான்.

எதிரில் இருப்பது சிவனில்லை என்று உணர்ந்த பார்வதி தன்னை காப்பாற்றுமாறு விஷ்ணுவை வேண்டினாள். ஜலந்தராவின் மனைவி விருந்தாவை பயமுருத்துமாறு அவரிடம் கூறினாள். விஷ்ணு விருந்தாவின் கனவில் தோன்றி கலக்கமுறச்செய்தார். உடனே அவள் எழுந்து அரண்மனை தோட்டத்திற்கு வந்தாள். அங்கு இரண்டு பேய்களையும் ஒரு தவம் செய்யும் முதியவரையும் கண்டாள். அவள் அப்பேய்களிடமிருந்து தன்னை காப்பாற்றும்படி முதியவரை வேண்டினாள். தன் கணவனைப் பற்றியும் விசாரித்தாள். உடனே அந்த முதியவர் இரு குரங்குகளை தோற்றுவித்து ஜலந்தராவை பற்றி அறிந்து வருமாறு பணித்தார். அவை சற்று நேரத்தில் அவனது தலை, கை கால்களை சுமந்து கொண்டு அங்கு வந்தன. அதைக் கண்டு வருத்தமுற்ற மனைவி தன் கணவனை உயிர்ப்பிக்குமாறு அந்த தபஸ்வியிடம் வேண்டினாள். அப்படியே ஜலந்தராவை உயிர்ப்பித்துவிட்டு அந்த தபஸ்வி மாயமானார். பின்னர் அங்கு இருந்து தபஸ்வி விஷ்ணுவே என அறிந்து அவள் தீயினுள் புகுந்தாள். அவளது உடம்பில் இருந்து ஒரு ஜோதி விலகி சென்று

பார்வதியின் ஆன்மாவோடு இணைந்தது.

சிவனும் ஜலந்தராவும் சாமர்த்தியமாக சண்டையிட்டனர். ஜலந்தரா பார்வதி உடல் போன்று உருவாக்கி தன் தளபதிகள் சும்பாவும், நிசும்பாவும் பார்வதியை கொன்றுவிட்டதாக காட்டினான். அது ஏமாற்று வேலை என உணர்ந்த சிவன், பார்வதியின் மூலமே அவ்விரு தளபதிகளை அழித்தார். ஜலந்தராவையும் சக்ராயுதத்தால் கொன்றார். அவனது ஆத்மா சிவனிடமே ஐக்யமாகியது. அமைதி நிலைநாட்டப்பட்டது. சிவன் ஜலந்தரகாரமூர்த்தி என அழைக்கப்பட்டார்.



தலைவனின் பின் செல், அசுரனை எதிர்கொள், இறுதிவரை போரிடு, ஆட்டத்தை வென்றிடு.

கோபம் மனதினை ஆட்கொள்கையில் மனிதன் அடிமையாகிட, அவன் புரிதல் மங்குகிறது.

புகழ்கையில் துள்ளாதே, தூற்றப்படுகையில் துவளாதே.

கருத்தில் சீர்தூக்கிப் பார்த்து பின் செய்தலே மனித இலக்கணமாகும்.

இன்றைய மாணவர்கள் நாளைய குருமார்கள்.

மனிதன் கருதிட மனமும், செயல்படுத்திட அன்பு நிறை இதயமும் படைத்திருக்க வேண்டும்.

- பாபா

# 11. கல்யாணசுந்தரமூர்த்தி

ஸ்லோகம்:

சிந்தூராபம் த்ரிநேத்ரம் யுக்புஜசஹிதம் ஹாரகேயூர பூஷம்
த்வ்யைர்வ ஸ்த்ரை:ர் வ்ருதாங்கம் வரசமுகித சத்வேஷ யுக்தம்
சபாங்கம் !
வந்தே கல்யாணமூர்த்திம் கரதலகமலே
தேவிஹஸ்தம் ததானம்
ஹஸ்தே டங்கம்ருகஞ்ச ததத்மத் வரம்
பத்தகங்கேந்து சூடம் !!

பொருள்:

"சிந்தூரத்தை அணிந்தவரும், முக்கண்னை உடையவரும், புஜபராக்ரமரும், ஸ்வர்ணமாலை அணிந்தவரும், அழகிய ஆடைகளை அணிந்தவரும், வேண்டியவர்களுக்கு வேண்டிய வரங்களை அளிப்பவரும், தாமரைக் கரங்களில் டமருவையும், மாலையையும் உடையவரும், கங்கையையும், சந்திரனையும் சூடிய கல்யாண சுந்தரமூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

மலயத்துவசன் எனும் பாண்டிய அரசன் மதுரையை தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தான். அவன் அழகும் வீரமும் மிக்கவன். மக்கள் பால் மிகுந்த அன்பு பாராட்டியவன். மக்களும் அவனிடம் பெறும் மதிப்பு காட்டினர். எல்லாவற்றிற்கும் மேலாக அவன் ஒரு சிறந்த சிவபக்தன். அவன் தன் மனைவி காஞ்சனமாலையை மிகவும் நேசித்தான். 99 அஸ்வ மேத யாகங்களை வெற்றியோடு நடத்தி முடிந்திருந்த அவன் தனது நூறாவது யாகத்தை நடத்த விரும்பினான். ஆனால் அதற்கு இந்திரன் தடையாக இருந்தான். மலயத்துவசனுக்கு குழந்தையில்லை. குழந்தை பாக்கியம் வேண்டி அவன் புத்திர காமேஸ்டி பூசை செய்தான். யாகம் முடியும் தருவாயில் யாககுண்டத்திலிருந்து பார்வதி ஒரு சிறிய பெண் வடிவில் வெளியே வந்து ராணி ரத்னமாலாவின் மடியில் அமர்ந்தாள். வினோதமாக அந்த சிறிய பெண்ணுக்கு மூன்று மார்பகங்கள் இருந்தன. அதைக் கண்ட

ராணி பதற்றமுற்றாள். அப்போது சிவன் நேரில் 'ஹாலஸ்யீஸ்வரராக' தோன்றி, அந்த பெண் தன்னை மணக்கவிருக்கும் ஆண் மகனைக் காணும்பொழுது அந்த மூன்றாவது மார்பகம் மறைந்து விடும் எனக் கூறி, ராணியின் பதற்றத்தை நீக்கினார். மேலும் சிவன் அந்தப் பெண்ணுக்கு தடாதகா என்னும் பெயரை சூட்டி அரச தம்பதியினரை மகிழ்வித்தார்.

காந்தர்வ அரசன் விஸ்வவாசுவின் மகள் வித்யாவதி. அவள் ஒரு சிறந்த தேவி பக்தை. அவளுடைய தந்தை மீனாட்சி தேவியை வணங்கும் படி கூறினார். ஒரு நாள் மீனாட்சி தேவி, வித்யாவதி தனக்கு சேவையாற்றிட வருவதைக் கண்டாள். உடனே மீனாட்சி தேவி மூலஸ்தானத்திலிருந்து மூன்று வயது பெண்ணாக வெளிவந்தாள். தேவி, வித்யாவதியிடம் தனக்கு வேண்டும் வரம் கேட்க சொன்னாள். வித்யாவதி மீனாட்சி தேவி அதே உருவில் எப்போதும் இருக்க வேண்டும் என்று வேண்டினாள், கேட்ட வரம் வழங்கப்பட்டது. அரசன் தன் மகள் வித்யாவதியை மகன் போலவே வளர்த்தான். அவளுக்கு வில்வித்தையும், அரச பரிபாலன பயிற்ச்சியும் தர ஏற்பாடு செய்தான். வித்யாவதியை அரச பீடத்தில் அமர்த்தி நாட்டை ஆளச் செய்தான்.

வருடங்கள் கடந்தன. மதுரை அரசன் மலயத்துவசனின் மகளான தடாதகா தன் தாயின் அனுமதி பெற்று வெற்றிகள் பல குவிக்க விரும்பினாள். அவள் சிவனை போற்றும் சிறந்த பக்தை. பஞ்சாட்சா மந்திரத்தில் (நமசிவாய) மிகுந்த நம்பிக்கை உள்ளவள். 'நமசிவாய' என இடைவிடாது ஜபித்து போரிட்டு, இந்திரனை வென்று கற்பக விருட்சம், காமதேனு, சிந்தாமணி போன்றவற்றினை கைப்பற்றினாள். ஈஷானாவின் உதவியோடு நிர்வகிக்கப்பட்ட தேஜோவடி நகரத்தினை கைப்பற்றினாள். நந்திகேஸ்வரரையும் போரிட்டு வென்றாள். அப்போது ஹாலஸ்ஈஸ்வரர் (சிவன்) சோமசுந்தரராக தோன்றி தடாதகாவை மணமுடிக்க முடிவு செய்தார். நந்திகேசுவரரும் சிவனிடம் தான் மூன்று மார்பகங்கள் கொண்ட ஒரு பெண்ணால் தோற்கடிக்கப்பட்டதாக கூறினார். சோமசுந்தரர் தடாதகாவை கண்ட மாத்திரத்தில் அவளது மூன்றாவது மார்பகம் மறைந்தது. அரசியின் மந்திரிகளில் ஒருவரான சுமதி அரசியிடம் அரசியின் மூன்றாவது மார்பகம் சோமசுந்தரரை கண்டதும் மறைந்ததை கவனித்ததாக கூறி, சோமசுந்தரண் அரசியை மணக்க போகிறார் என்றாள்.

அதைக்கேட்ட அரசி மிகவும் மகிழ்ந்து சோமசுந்தரரின் அழகினை மிக மெச்சி தன் ஆயுதங்களை துறந்தாள். இந்த செய்தி ராணி காஞ்சனமாலையை அடைந்தது. உடனே அவள் சோமசுந்தரரை தன் மகளை மணந்து கொள்ளுமாறு வேண்டினாள். அதற்கு சோமசுந்தரர் எதிர்வரும் திங்கட்கிழமை என மணநாள் குறித்தார். பெருமகிழ்ச்சி அடைந்த காஞ்சனமாலை திருமண ஏற்பாடுகளை விரைந்து செய்தாள். மதுரை மாநகரம் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டது. சிவன் தன்னுடன் பிரம்மா, விஷ்ணு, சரஸ்வதி, லக்ஷ்மி மேலும் பல ரிஷிகளுடன் மணவிழா இடத்தினை அடைந்தார். காஞ்சனமாலை அவர்களை வெகு மரியாதையுடன் வரவேற்றாள். சிவன் கூறியபடி பிரம்மா திருமண புரோகிதராக செயல்பட்டார். விஷ்ணுவும், லக்ஷ்மியும் மணப்பெண்ணை மேடைக்கு அழைத்து வந்தனர். தெய்வீக திருமணம் மிகச் சிறப்பாக நடந்தேறியது. காஞ்சனமாலை தன் மாப்பிள்ளை சோமசுந்தரரை மதுரையிலேயே தங்கி மதுரை நகர மக்களை பாதுகாத்திட வேண்டினாள். சோமசுந்தரர் அதனை ஏற்று பாண்டிய நாட்டின் அரச பதவியில் அமர்ந்தார். சிவன் தனது 'சம்யாக' மாலையை துறந்து பூமாலை ஒன்றினை அணிந்தார்.

பஸ்மமும், பாம்புகளும் விலகிட அழகான ஆபரணங்களை சிவன் சூட்டிக்கொண்டார். 'விருக்ஷபட்வசா மீனாட்வஜாக' மாறியது. இந்த தெய்வீக திருமண நினைவாக மேற்கு திசை நோக்கிய ஒரு அழகான கோயில் நிர்மாணிக்கப்பட்டது. அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்திற்கு மஹாபேஷ்டபிரதேஸ்வாரா எனப் பெயர் சூட்டப்பெற்றது. இவ்வாறு சிவன் புகழ்மிக்க கல்யாண சுந்தரேஸ்வரர் ஆனார்.



## 12. கங்காலமூர்த்தி

ஸ்லோகம்:

பஸ்மலேபகரம் த்ரிபுண்ட்ரவிலசித்
சிந்தூரசித்ரான்விதம்
டக்காம் வாமகரேஷீ ஸவ்ய ப்ரஹரம்
சர்மாம்பரை: ஷோபிதம் !!
சூலம் க்ருணம்ருகஸ்ய லம்பிதகரம்
சூடேந்து ப்த்தம் ஹரம்
ஸேவே ஸேந்துபுரே சரந்த்மணிஷம்
கங்காலமூர்த்திம் சிவம் !!

பொருள்:

"விபூதியை பூசிக் கொண்டிருப்பவரும், மூன்று பட்டைகளால் விளங்குகிறவரும், சிந்தூரத்தினால் பிரகாசிக்கிறவரும், இடது கையில் உள்ள உடுக்கையை, வலது கையால் அடிப்பவரும், தோலாடையால் அழகான தோற்றத்தை உடையவரும், சூலம், கறுத்த மானுடனும், தொங்குகிற கையை உடையவரும், சந்திரனை சூடியவரும், இந்திர புரியில் எப்போதும் சஞ்சரிப்பவரான கங்காலமூர்த்தியான சிவனை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஹிரண்யகசிபுவின் சகோதரன் ஹிரன்யக்ஷா, அவன் பாதாளம் எனும் தன் நாட்டிற்கு பூலோகம் முழுவதையும் தூக்கிச்சென்றுவிட்டான். பூலோகத்தின் காவலரான விஷ்ணு, பன்றி உருவமெடுத்து அவனை அழித்தார். இந்த வெற்றிக்குப் பின் விஷ்ணு பன்றி வடிவில் தேவர்களை மிகவும் துன்புறுத்தி வந்தார். தேவர்கள் சிவனை அடைந்து தம் கஷ்டங்களை தெரிவித்தனர். சிவன் பன்றி உருவத்தை அழித்தார்.

இதற்கிடையில் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலை கடைந்து அமிர்தம் எடுக்க விரும்பினார். அவர்கள் இணைந்து க்ஷீரசாகரம்தனை காணச் சென்றனர். அங்குதான் கடையும் பணி நடக்கவிருந்தது மந்தார மலையினை மத்தாகவும், வாசுகி எனும் பாம்பினை கயிறாகவும், கொண்டு கடலை கடைய திட்டமிட்டனர். கடையும் போது மந்தாரமலை கடலுக்குள்

முழ்கிவிட்டது. அப்பொழுது விஷ்ணு ஆமை உருவம் ஏந்தி, கடலினுள் முழ்கி, மந்தாரமலையை மீட்டு வந்தார். கடல் கடையப்பட்டபோது காமதேனு எனும் பசு, ஒரு வெண்குதிரை, ஒரு யானை, மதிப்பு மிகு ஆபரணம், கற்பக விருட்சம் எனும் மரம், லட்சுமிதேவி, தேவர்களின் மருத்துவர் தன்வந்திரி, அமிர்தம் ஆகியனவெல்லாம் கிடைத்தன. அமிர்தம் வெளிவந்தவுடன் தேவர்களும் அசுரர்களும் அதை பெறுவதற்காக சண்டையில் இறங்கினர். ஆமை உருவ விஷ்ணுவும் தொல்லைகள் தரத்துவங்கினார். அமிர்தம் தோன்றியதற்கு தான் தான் முக்கிய காரணம் என விஷ்ணு கூறினார். அதனை ஒப்புக்கொள்ளாமல் தேவர்கள், பிரம்மாவின் தலைமையில் சென்று சிவனை சந்தித்து முறையிட்டனர். சிவன் விஷ்ணுவின் ஆமை உருவத்தை அழித்தார். ஆமை ஓட்டினை ஆபரணமாக தரித்துக் கொண்டார். குழப்பங்கள் முடிவுக்கு வந்தன. இவ்வாறு சிவன் கங்காலமூர்த்தி ஆனார்.



இறைஉணர்வு போற்றுதல், பல உருவில், பல மொழிகளால், பல இசைகளில் நிகழட்டும்.

நம்பிக்கை நமது உயிர்மூச்சாம். அது இன்றேல் உலகில் ஒரு நொடி கூட வாழ இயலாது.

மனிதனுக்கு வேண்டுவது ஒன்று உண்டு என்றால் அது பொறுமையே.

மனிதன் தன்நிலை மறந்து மிருகமாகிட வைப்பது ஆசையே.

உயர்சேவை பலன் எதிர்பாராதது. பகட்டில்லாதது. பலன் பெறுவோரின் நன்றியை கூட எதிர்பாராதது.

நீ உன் தாயை போற்றினால், உன்னை பூமித்தாய் காப்பாற்றுவாள். நீ உன் தந்தையை போற்றிப் பாதுகாத்திட, அனைத்து ஜீவிகளின் தந்தையான இறைவன் உன் நலம் காப்பார்.

- பாபா

## 13. கிராதமூர்த்தி

ஸ்லோகம்:

சதுர்புஜம் த்ரிநேத்ரம்ச ஜடாமுகுட சம்யுதம் !
சர்வாபரண சம்யுக்தம் திவ்யாம்பர சமாவ்ருதம் !!
தனுர்பாணயுதம் ரக்தம் க்ருஷ்ணா பரசு சம்யுதம் !
உபவீத சமாயுக்தம் சமபங்தனும் குரு!!
வாமே கௌரி சமாயுக்தம் தக்ஷிணேத்வர்ஜனம் ஸ்திதம் !

பொருள்:

"நான்கு கைகளையும், மூன்று கண்களையும், ஜடாமுடியை மகுடமாக அணிந்து அனைத்துவிதமான அணிகலன்களை அணிந்தவரும், ஆகாயத்தை உடையாகிய தரித்தவரும், வில், அம்பை கையில் ஏந்தியவரும், சிவந்த நிறத்தை உடையவரும், கோடாரியை கையில் தரித்தவரும், முப்புரிநூல் அணிந்தவரும், தன் உடலில் இடது பாகத்தில் பார்வதிக்கு கொடுத்தவரும், வலது பாகத்தில் அர்ச்சுனனை உடையவருமான கிராதமூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

பாண்டவர்கள் தங்களின் அஞ்ஞானவாச காலத்தில் ஒரு சமயம் தங்களின் விரோதிகளான கவுரவர்களின் செயல்பாடு பற்றி அறிந்திட ஆவல் கொண்டனர். அவர்கள் அதற்காக அனுப்பிய ரகசிய தூதன் திரும்பி வந்து விபரமாக கவுரவர்கள் செயல்பாடுகளை விவரித்தான். கவனமாக கேட்டுக் கொண்ட பாண்டவர்கள் தம் எதிர்காலம் பற்றி கவலை கொண்டனர். அப்போது வியாசர் அவர்களின் இருப்பிடம் வந்து சேர்ந்தார். சிவனை நினைத்து பூசை செய்வது ஒன்றே அவர்தம் துயர்தீர்த்திட ஒரே வழி என அறிவுரை கூறினார். எளிதாக தெளிவு பெற அவர்களுக்கு இந்திரமந்திரத்தை சொல்லிக் கொடுத்து இந்திரகீலாமலையில் சென்று ஜபித்திட அவர்தம் தேவை நிறைவேறும் என்றார். அர்ஜுனனுக்கு அவர் கூறியது மிகவும் பிடித்திருந்தது.

அதன்படி செய்ய முற்பட்டார். அவர் அசோக ஆரண்யத்திற்கு சென்று சிவனை வழிபட்டார். இந்த செய்தி இந்திரனை அடைந்ததும், அவர் ஒரு வயதானவர் உருவத்தில் அங்கு வந்து அர்ஜுனனிடம் அவர் தம் வேண்டுதல் என்ன என வினவினார். அர்ஜுனன் தன் விரோதிகளால்

தனக்கு ஆபத்து விளையும் என அஞ்சுவதாகவும், அதற்கு பாதுகாப்பான வழி ஒன்றினை கூறுமாறும் அந்த வயதானவரிடம் வேண்டினார்.

அதே நேரத்தில் துரியோதனன் மூகா எனும் அரக்கனை ஏவி அர்ஜுனனின் தவத்தை கலைத்துவிடுமாறு கூறினார். மூகா பன்றி உருவெடுத்து அங்கு வந்து தொல்லை தர முயன்றார். இதைக் கண்ட அர்ஜுனன் அந்த பன்றியை துன்புறுத்தி அழிக்க முற்பட்டார். அப்போது அர்ஜுனன் தவத்தால் மனம் மகிழ்ந்த சிவன், அர்ஜுனனை காத்திட பன்றியுடன் சண்டையிட்டார். வேடுவன் வேடத்தில் அங்கு வந்த சிவனும், அர்ஜுனனும் பன்றியினை தாக்கினார். சிவன் விடுத்த அம்பு அந்த பன்றியின் வாலில் தாக்கி தலையை நோக்கி பாய்ந்தது. அர்ஜுனது அம்பு அந்த பன்றியின் தலையில் தாக்கி வாலை நோக்கி சென்றது. சிவன்-அர்ஜுனன் இருவரது உதவியாளர்களும் அவ்விடம் வந்து பன்றியின் உடலிலிருந்து தமது தலைவர்களின் அம்புகளை மீட்டுச் செல்ல முயன்றன். அப்போது அவர்களுக்குள் சண்டை மூண்டது. அதைக் கண்டதும் அர்ஜுனனுக்கு கோபம் ஏற்பட்டது. தான் அவமதிக்கப்பட்டதாக கருதி (சிவனுடைய) வேடனுடைய உதவியாளரிடம் சண்டைக்கு சென்றான். அப்போது தான் அரசன் என்பதால் தன்னிடம் நிறைய ஆயுதங்கள் உள்ளதாகவும், பிறர் ஆயுதங்களை பறிக்க வேண்டிய தேவையில்லை என்றும் கூறினார். அந்த உதவியாளர் அதை சிவனிடம் சென்று கூறினார்.

அர்ஜுனனுக்கு ஒரு பாடம் கற்பிக்க கருதி சிவன், வேடன் வேடத்தில் அங்கே சென்றார். சிவனின் புத்திமதி பலன்தரவில்லை. அர்ஜுனன் கர்வமாக பேசவும் இருவரிடையே சண்டை மூண்டது. ஒரு சமயம் சிவனின் காலை பற்றிய அர்ஜுனன் அவரை நிலைகுலையச் செய்தார். ஆனால் தன் காலைதொட்டுவிட்ட அர்ஜுனனை சிவன் ஆசிர்வதித்தார்.

சிவன் தன் உருவத்திற்கு மாறினார். ஆச்சரியத்தில் மூழ்கிய அர்ஜுனன் சரணடைந்து சிவனை வணங்கினார். மனம் மகிழ்ந்த சிவன் அர்ஜுனனுக்கு பசுபதி அஸ்திரம் எனும் ஒரு பலம் மிகுந்த ஆயுதத்தை வழக்கினார். மேலும் தனது மூத்த சகோதரன் தர்மனின் வழியினை பின்பற்றி நடக்குமாறு அறிவுரை கூறினார். இதன் பின் சிவன் கிராதமூர்த்தி எனும் பெயரில் அழைக்கப்பட்டார்.

## 14. காலாரிமூர்த்தி

ஸ்லோகம்:

சிந்தூராபம் த்ரிநேத்ரம் யுக்புஜசஹிதம்
ஷீலமுத்தத்ய ஹஸ்தம்
டங்கம் சூசிபரஷீபாஷசம்யுதம்
பீஷ்மதஷ்ட்ரம் சுவக்த்ரம் !
பாதௌ குஞ்சிதவாமமுத்தத் தலம்
காலஸ்ய வக்ஷஸ்தலே
லங்க்யம் பின்னஜடாத்ரம் ப்ரணமதாம்
காலாந்தகம் தைவதம் !!

பொருள்:

“சிந்தூரத்தை உடலில் அணிந்தவரும், முக்கண்ணை உடையவரும், புஜபராக்ரமத்தை உடையவரும், கையில் சூலத்தை ஏந்தியவரும், உடுக்கையையும், பாசாங்குசத்தையும் உடையவரும், அழகிய முகத்தை உடையவரும், வலது பாதத்தை சிறிது தூக்கிய நிலையில் உடையவரும், காலனை வென்றவரும், மாறுப்பட்ட தேகத்தை உடையவருமாகிய காலாரிமூர்த்தியை வணங்குவோம்.”

விளக்கம் :

ஸ்வேதா எனும் பெயரில் ஒரு சிறந்த அரசன் இருந்தான். அவன் சிவபக்தி அதிகம் உடையவன். ஒரு சமயம் ஸ்வேதா சிவபூசையில் ஈடுபட்டிருந்தபோது எமன் தன் தூதுவனை அனுப்பி அவனை அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினான். ஸ்வேதா அப்போது சிவபூசையில் ஈடுபட்டிருந்தான். அதனால் எம தூதனால் அவனை நெறுங்க முடியவில்லை. எம தூதன் தனியாக திரும்பிச் சென்றான். உடனே எமராஜா தானே அங்கு சென்றான். அரசனின் சிவபக்தி ஆழத்தை கண்டு வியப்புற்றான்.

அவராலும் ஏதும் செய்ய இயலவில்லை. எமராஜாவை அழைத்து காலன் ஏன் உரிய நேரத்தில் ஸ்வேதாவை எமலோகத்திற்கு அழைத்துவரவில்லை என வினாவினார். எமராஜா சிவனின் பாதுகாப்பில்

ஸ்வேதா இருந்ததால் தன்னால் அழைத்து வர இயலவில்லை என்றான். உடன் காலன் சிவனை நெருங்கி சண்டையிட முயன்றான். சிவன் அவனை வென்று பஸ்மமாக்கினான். காலனின் முக்கியத்துவம் அறிந்த ஸ்வேதா, காலனை விடுவிக்கும்படி சிவனை வேண்டினார். காலன் இல்லையேல் எதுவும் நடைபெறாது என ஸ்வேதா கூறினார். சிவன் காலனை மன்னித்தார். காலன் சிவனை வாழ்த்தி, ஸ்வேதாவை மிகச்சிறந்த அரசன் என பாராட்டினார். காலன் மேலும் பஞ்சாட்சர மத்திரத்தின் (நமசிவாய) மகிமையை விளக்கினார். இவ்வாறு சிவன் காலாரிமூர்த்தி என அழைக்கப்பட்டார்.



இரண்டு போர்களின் இடைப்பட்ட காலத்தை அமைதிக்காலம் என மேலைநாடுகள் குறிப்பிடும். அது அமைதி அல்ல. மனிதன் நல்லதே நினைத்து நல்லதே செய்திட அமைதி நின்று நிலவும்.

அன்பின்றி பணியாற்றுதல் தூற்றுதர்குரியது. அன்புடன் ஆற்றும் பணிபோற்றுதற்குரியது. பலன் எதிர்பாராதது இறைகுணமாகும்.

செயல்படுத்தப்படாத, தேங்கிய அறிவு சீரணமாகாத உணவு போல பலனற்றது.

மனிதரின் உடல்பலம் - பணபலம் - அறிவாற்றல் வேறுபடலாம். ஆனால் இறைவன் முன் அவர்களிடையே வேறுபாடு ஏதும் இல்லை.

ஒரு நாட்டின் பெருமை அந்த மக்களின் நன்னெறி மிகுந்த வாழ்வால் மட்டுமே அமையும்.

உன் ஓய்வு நேரத்தை பிறருக்கு உதவிடவும். இறை நினைவுயாற்றிடவும் பயன்படுத்து. வீணடிக்காதே.

- பாபா

## 14. காலாரிமூர்த்தி

ஸ்லோகம்:

சிந்தூராபம் த்ரிநேத்ரம் யுக்புஜசஹிதம்
ஷீலமுத்தத்ய ஹஸ்தம்
டங்கம் சூசிபரஷீபாஷசம்யுதம்
பீஷ்மதஷ்ட்ரம் சுவக்த்ரம் !
பாதௌ குஞ்சிதவாமமுத்தத் தலம்
காலஸ்ய வக்ஷஸ்தலே
லங்க்யம் பின்னஜடாத்ரம் ப்ரணமதாம்
காலாந்தகம் தைவதம் !!

பொருள்:

"சிந்தூரத்தை உடலில் அணிந்தவரும், முக்கண்ணை உடையவரும், புஜபராக்ரமத்தை உடையவரும், கையில் சூலத்தை ஏந்தியவரும், உடுக்கையையும், பாசாங்குசத்தையும் உடையவரும், அழகிய முகத்தை உடையவரும், வலது பாதத்தை சிறிது தூக்கிய நிலையில் உடையவரும், காலனை வென்றவரும், மாறுப்பட்ட தேகத்தை உடையவருமாகிய காலாரிமூர்த்தியை வணங்குவோம்."

விளக்கம் :

ஸ்வேதா எனும் பெயரில் ஒரு சிறந்த அரசன் இருந்தான். அவன் சிவபக்தி அதிகம் உடையவன். ஒரு சமயம் ஸ்வேதா சிவபூசையில் ஈடுபட்டிருந்தபோது எமன் தன் தூதுவனை அனுப்பி அவனை அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினான். ஸ்வேதா அப்போது சிவபூசையில் ஈடுபட்டிருந்தான். அதனால் எம தூதனால் அவனை நெறுங்க முடியவில்லை. எம தூதன் தனியாக திரும்பிச் சென்றான். உடனே எமராஜா தானே அங்கு சென்றான். அரசனின் சிவபக்தி ஆழத்தை கண்டு வியப்புற்றான்.

அவராலும் ஏதும் செய்ய இயலவில்லை. எமராஜாவை அழைத்து காலன் ஏன் உரிய நேரத்தில் ஸ்வேதாவை எமலோகத்திற்கு அழைத்துவரவில்லை என வினாவினார். எமராஜா சிவனின் பாதுகாப்பில்

ஸ்வேதா இருந்ததால் தன்னால் அழைத்து வர இயலவில்லை என்றான். உடன் காலன் சிவனை நெருங்கி சண்டையிட முயன்றான். சிவன் அவனை வென்று பஸ்மமாக்கினான். காலனின் முக்கியத்துவம் அறிந்த ஸ்வேதா, காலனை விடுவிக்கும்படி சிவனை வேண்டினார். காலன் இல்லையேல் எதுவும் நடைபெறாது என ஸ்வேதா கூறினார். சிவன் காலனை மன்னித்தார். காலன் சிவனை வாழ்த்தி, ஸ்வேதாவை மிகச்சிறந்த அரசன் என பாராட்டினார். காலன் மேலும் பஞ்சாட்சர மத்திரத்தின் (நமசிவாய) மகிமையை விளக்கினார். இவ்வாறு சிவன் காலாரிமூர்த்தி என அழைக்கப்பட்டார்.



இரண்டு போர்களின் இடைப்பட்ட காலத்தை அமைதிக்காலம் என மேலைநாடுகள் குறிப்பிடும். அது அமைதி அல்ல. மனிதன் நல்லதே நினைத்து நல்லதே செய்திட அமைதி நின்று நிலவும்.

அன்பின்றி பணியாற்றுதல் தூற்றுதர்குரியது. அன்புடன் ஆற்றும் பணிபோற்றுதற்குரியது. பலன் எதிர்பாராதது இறைகுணமாகும்.

செயல்படுத்தப்படாத, தேங்கிய அறிவு சீரணமாகாத உணவு போல பலனற்றது.

மனிதரின் உடல்பலம் - பணபலம் - அறிவாற்றல் வேறுபடலாம். ஆனால் இறைவன் முன் அவர்களிடையே வேறுபாடு ஏதும் இல்லை.

ஒரு நாட்டின் பெருமை அந்த மக்களின் நன்னெறி மிகுந்த வாழ்வால் மட்டுமே அமையும்.

உன் ஓய்வு நேரத்தை பிறருக்கு உதவிடவும். இறை நினைவுயாற்றிடவும் பயன்படுத்து. வீணடிக்காதே.

- பாபா

## 15. காமாரிமூர்த்தி

ஸ்லோகம் :

பஸ்மோத்தூலித விக்ரஹம் ஷஷித்ரம் வேணிஜடாமண்டிதம்

டங்கம் க்ருஷ்ண ம்ருகம் ததானமபயம்

வீராசனே சம்ஸ்திதம்!

அங்கே சவ்யதலோபரி கரதலம்

வின்யஸ்ய யோகேஷ்வரம்

வ்யாக்ரத் வக்வஸசனம் லலாட சத்ருஷ

தக்தம் ஸ்மரேஷம் பஜே !!

பொருள்:

"விபூதி பூசப்பட்ட உடலை உடையவரும், சந்திரனை அணிந்தவரும், கேசத்தை ஜடையாகக் கொண்டவரும், உடுக்கை, கறுப்புமான் இவற்றுடன் அபய ஹஸ்தத்தைத் தாங்கி வீராஸனத்தில் வீற்றிருப்பவரும், வலது கையை தன்னுடைய மார்பில் வைத்திருப்பவரும், ஆகிய புலித்தோலில் அமர்ந்து நெற்றிக் கண்ணால் காமனை எரித்த காமதகனமூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஒரு சமயம் தக்ஷபிரம்மா தான் ஏற்பாடு செய்த ஒரு யாகத்திற்கு சிவனையும், சதியையும் அழைக்கவில்லை. அதனால் ஏமாற்றமடைந்து பெரிதும் வருந்திய தக்ஷனின் மகளான சதி யாககுண்டத்தில் தன் உயிரை தியாகம் செய்தாள். வருத்தமடைந்த சிவன் கங்காவதாரா எனும் இடம் சென்று தவம் செய்தார். தன் சீடர்களிடம் தன் தவத்திற்கு இடையூறு ஏற்படாமல் கவனமாக இருக்கப்பணித்தார். இதற்கிடையில் ஹிமாவந்தன் சிவனை அணுகி சேவையாற்றிட ஒரு வாய்ப்பு வேண்டினார். சிவன் அவரது வேண்டுகோளை ஏற்றார். ஹிமாவந்தன் தன் மகள் பார்வதியுடன் பூக்களுடனும், பழவகைகளுடனும் வந்தடைந்தார். ஹிமாவந்தன் சிவனிடம் தன் மகள் பார்வதியையும் அவ்வாறு செய்திட அனுமதி கேட்டார். சிவன் ஒப்புதல்தரவில்லை. உடன் ஹிமாவந்தன் பார்வதிக்கு அத்தகு பூசை

செய்திட அருகதை இல்லையா எனக் கேட்டார். உன் பெண் மிகவும் அழகானவள். அவளால் (மோகத்தால்) என் தவம் கலையக்கூடும் என்றார். உடனே பார்வதி சிவனை நோக்கி “உங்கள் தவம் கலையாமல் உங்களால் தொடர முடியும். இயற்கையே (பிரகிருதி) நீங்கள் தானே. இயற்கையிலிருந்து தானே அனைத்து சிருஷ்டிகளும் உருவாயின. இந்த இயற்கையிலிருந்து தானே ஆக்கல்-காத்தல்-அழித்தல் ஆகிய மூன்றும் இயலும். அதனால் தான் உங்களுக்கு உருவம் ஏதும் இல்லை. நீங்கள் லிங்கமாக பூஜிக்கப்படுகிறீர்கள். அந்த இயற்கை தானே பார்வதி ஆகிய நான்” என்றாள். அதற்கு சிவன் என் சக்தியால் அனைத்தையும் என்னால் அழிக்க முடியும் என்றார். அப்படி உங்களுக்கு எந்த பாசமும் எதன் மேலும் இல்லையென்றால் என்னால் எப்படி உங்கள் தவத்திற்கு இடையூறு ஏற்படும் எனக் கேட்டாள் பார்வதி, அதைக் கேட்டதும் சிவன் பார்வதியை பூசை செய்ய அனுமதித்தார்.

சிவன் தன் தவத்தை தொடர்ந்தார். இந்த சமயத்தில் இந்திரனுக்கும், ஏனைய தேவர்களுக்கும் தராகன் எனும் அசுரன் தரும் தொல்லை அதிகமாயிற்று. தேவர்கள் பிரம்மாவிடம் உதவி கேட்டு அணுகினர். பிரம்மா அந்த நேரத்தில் சிவனை அணுக இயலாது என்பதை உணர்ந்தார். மேலும் சிவனை இந்த சூழலில் மன்மதன் ஒருவன் மட்டுமே அணுகவியலும் எனக் கருதினார். அந்தப் பொறுப்பு மன்மதனிடமே விடப்பட்டது. சிவனின் மனதை எப்படியாவது கலைத்திட மன்மதனும் அவன் தோழி வசந்தாவும் முயன்று தோல்வியே கண்டனர். சிவனின் நெற்றிக்கண் வலிமையை உணர்ந்த மன்மதன் மிகவும் பயமுற்றான். சிவன் ஓய்வில் இருந்தார். பார்வதி தன் தோழிகளுடன் சிவனை நோக்கி வந்தாள்.

இத்தகு வாய்ப்புக்காக காத்திருந்த மன்மதன், சிவனின் மேல் ஷர்ஷன, புஷ்ப சாரா ஆகிய இரு அம்புகளை வீசினான். பார்வதியின் அழகால் ஈர்க்கப்பட்டு சிவன் அவளை நோக்கினான். சிறிது நேரத்தில் ஏற்பட்ட மாற்றத்தை சிவன் உணர்ந்தார். தன் தவம் கலைய காரணம் யார் என கருதிப் பார்த்தார். அந்த சமயம் மன்மதன் சிவனை நோக்கி மேலும் ஒரு அம்பை செலுத்தியும் பயனில்லை. பயந்துபோன மன்மதன் இந்திரன் ஆகிய சிலரிடம் உதவி கோரினான். அவர்கள் சிவனை வணங்கி, சிவனால் மட்டுமே இந்த பிரச்சனைக்கு தீர்வு காணவியலும் எனக் கூறினர்.

இந்த நேரத்தில் சிவனது நெற்றிக்கண்ணிலிருந்து வெளிவந்த உக்ரமான தீப்பிழம்பு மன்மதனை தாக்கியது. தேவர்கள் நடந்தவற்றிற்கு மன்னிப்பு கோருமுன் மன்மதன் பஸ்பமாகி விட்டான். தேவர்கள் என்ன செய்வதறியாது திகைத்திட, மன்மதனின் மனைவி, ரதி மிகவும் வருந்தினாள். கருணையுற்ற சிவன் ரதியைப் பார்த்து "வருந்தாதே, உன் கணவன் மன்மதன் துவாரகையில் பிரத்யும்மா எனும் பெயரில் பிறந்து உன்னை மீண்டும் மணப்பான்" என்றார். அந்த உறுதிமொழியினை கேட்ட ரதி மகிழ்ச்சியுற்றாள். அது முதல் சிவன் காமாரிமூர்த்தி என பெயர் பெற்றார்.



அமைதியின் ஆழத்தில் இறைவன் குரல் கேட்கும்.

குறுகிய மனம்படைத்தோர் குறுகிய வழிகளையே தேர்வு செய்வர். நீ உன் மனதை விஸ்தாரமாக்கி, பிறருக்குதவி, கருணை காட்டல் - சேவை - ஆற்றல் என பெரும் செயல்களை செய்திடு.

நீ கடவுளை நோக்கி ஒரு அடி வைத்தால் அவர் உன்னை நோக்கி பத்து அடிகள் வருவார்.

நாமெல்லாம், இறைவன் எனும் ஒரு நூலில் கோர்க்கப்பட்ட ரத்தினங்கள் என உணருங்கள்.

நீ இறைவனை சரணடைந்தால் அவர் உன்னை காத்தருள்வார்.

ஆக்கபூர்வமான எண்ணங்கள், இதமான சொற்கள், கருணை மிகு செயல்கள் உனதாகட்டும்.

- பாபா

## 16. லிங்கோத்பவமூர்த்தி

ஸ்லோகம்:

தேவம் கர்பக்ருஹஸ்ய மானகலிலே
லிங்கே ஜடாகேகரம் !
கட்யாசக்ததகரம் பரைஷ்ச தததம்
க்ருஷ்ணன் மிருகம் சாபயம் !!
சவ்யே டங்கமமேய பாதமகுடே ப்ரஹ்மாச்யுதாப்யாம் யுதம்
ஊர்த்வார்தஸ்ஸிதித ஹன்ஸகோலமமலம்
லிங்கோத்பவம் பாவயே !!

பொருள்:

"கர்ப்பக் கிருஹத்தில் லிங்க வடிவத்தில் ஆடையை தரித்திருப்பவரும், ஒரு கையை இடுப்பில் வைத்திருப்பவரும், மற்ற கையில் கறுத்த மான், அபயஹஸ்தம், வலது கையில் உடுக்கையும், பாதத்திலும், மகுடத்திலும், ப்ரஹ்மாவையும், விஷ்ணுவையும் உடையவரும், மேலே அன்னப்பறவையும், கீழே பன்றியையும் உடையவரும், அப்பழுக்கற்றவருமான லிங்கோத்பவரை த்யானிக்கிறேன்."

விளக்கம்:

பூலோகம் அழிந்து கொண்டு இருக்கும்போது அதன் காவலரான விஷ்ணு கடலில் உறங்கிக்கொண்டு இருந்தார். பிரம்மா, விஷ்ணு எங்கு இருக்கின்றனர் என வினவத் தொடங்கினார். விஷ்ணுவின் கையை ஆட்டி அவரை பிரம்மா எழுப்பிட முயன்றார். விஷ்ணு கோபமடைந்தார். பிரம்மனை ஏன் வந்தீர்கள் என வினவினார். பிரபஞ்சம் முழுமைக்கும் மூலமான தனக்கு எங்கும் சென்றிட உரிமையுள்ளதாக பிரம்மா பதில் கூறினார். பிரம்மாவை விஷ்ணு ஒரு இளையவன் போல நடத்தியது அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் உடனே ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று பொறுப்புகளும் தனக்குள்ளதாக கூறினார். தனது நபியிலிருந்து தோன்றிய பிரம்மா தன்னை சிருஷ்டி கர்த்தாவாக உரிமை கொண்டாட இயலாது என்றார் விஷ்ணு இருவரும் வாக்குவாதத்தை

தொடர்ந்திட மனக்கசப்பு அதிகமாயிற்று. அதைக் கண்ட சிவன், அவர்களுக்கு தெளிவு பிறந்திட வேண்டி பாதாளம் முதல் ஆகாயம் வரை நீண்ட ஒரு வெண்மையான குச்சியாக உருவம் எடுத்து அவர்கள் முன் தோன்றினார். அதைக் கண்ட பிரம்மா, விஷ்ணு இருவரும் ஆச்சரியமுற்றனர். உண்மையறிய விரும்பி விஷ்ணு பன்றி உருவம் எடுத்து பூமியை தோண்டத்துவங்கினார். பிரம்மா ஒரு அன்னப்பறவையாக உருவமெடுத்து ஆகாயம் நோக்கிப் பறந்தார். ஆனால் அவர்களால் அடியையும், உச்சியையும் காண இயலவில்லை. அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. தங்களைவிட உயர்ந்த சக்தி அது என்பதை உணர்ந்த அவர்கள் சிவனை கருதி, தொழுது நின்றனர். "ஓம்" எனும் ஒலியினை (அ-உ-ம்) அவர்கள் செவியில் கேட்டனர். அது உருவமில்லாத இறை உருவம் என்பதை உணர்ந்தனர். 'அ' என்பது ரிக் வேதத்தையும், 'உ' என்பது யஜுர் வேதத்தையும், 'ம்' என்பது சாம வேதத்தையும் குறித்திட, எழும் ஒலி அதர்வன வேதத்தை குறிப்பனவாகும். 'ஓம்' எனும் பிரணவ மந்திரமே அனைத்து வேதங்களின் மூலமாகும். ஒரு நீண்ட குச்சிபோன்ற ஒளிப்பிழம்பு லிங்கம் - அந்த மூர்த்திலிங்கோத்பவர் என அழைக்கப்படுபவர். தன்னால் உச்சியினை காணவியலாத போதும் தான் கண்டதாக விஷ்ணுவிடம் கூறி பிரம்மா தன் தகுதியினை இழந்தார். அதனாலேயே பிரம்மாவுக்கு என தனித்தன்மை, அடையாளம் ஏதும் இல்லை.



## 17. நடராஜமூர்த்தி

ஸ்லோகம்:

ஏகாஸ்யந்து சதுர்புஜம் த்ரிநயனம்
வாமேது துர்தூரகம்
சந்த்ரம் பத்ரசிகி ப்ரஸாரிதகரம்
சோர்தவம் பதம் குஞ்சிதம்!
சவ்யே ஸ்வஸ்திககுண்டலம் டமருகம்
கங்காபய பிப்ரதே
வந்தே சீர்ண ஜடம் நடேஷ நிஷமஸ்மாரதேஹே
ஸ்தித்ம் !!

பொருள்:

"ஒரு முகமும் நான்கு புஜங்களையும், மூன்று கண்களையும் உடையவரும், இடது கையில் தீச்சட்டி ஏந்திட, சந்திரனை தரித்தவரும், விரிந்த கைகளை உடையவரும், வளைந்த மேல் நோக்கிய பாதங்களை உடையவரும், வலதுபுறம் ஸ்வஸ்திகம், குண்டலம், உடுக்கை, கங்கை, அபய முத்ரை முதலியவைகளை உடையவரும், விரித்த ஜடையை உடையவரும், அபஸ்மாரன் என்னும் அரக்கனின் உடலின் மேல் நிற்பவருமான நடராஜ மூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

இந்துக்கள் இறைவனை சிவன்-சக்தி-விஷ்ணு எனும் மூன்று உருவங்களில் வணங்குவர். சிவன் லிங்க உருவில் அருபமாக பூஜிக்கப்படுபவர். எனினும் சிவனது பல உருவங்கள் வழிபாட்டிற்கென மூலஸ்தானத்திற்கு வெளியே தூண்களில் சுவர்களில் இருப்பதைக் காணலாம். அவை எட்டுவகைகளாக பிரித்துப் பார்க்கப்படுகின்றன. அவைகளுள் தாண்டவமுர்த்தி உருவம் விசேடமானது. சிவநடனம் பற்றி பல சிறந்த கல்வியாளர்கள் எழுதியுள்ளனர். அவை சிவனை மூலமாக சித்தரிக்கின்றன. சிவனது பல உருவங்களில் நாட்டியமூர்த்தியான உருவமே

மிக சிறந்தது. பிரபல்யமானது, மிகவும் பரவியிருப்பது.

கி.மூ 400 ஆண்டு காலத்து பாணிணியின் சூத்திரங்களில் நந்திகேஸ்வரர், மகேஷ்வர் பற்றிய பகுதிகளில் நடராஜர் எனும் பெயர் முதன் முதலாக அறியப்பட்டது. சிவன் தனது தமறு (ட்மளம்) மூலமாக பதிநான்கு வேறு வேறு வகையான ஒலிகளை எழுப்பி நடனமாடி பதிநான்கு வகைகளை உருவாக்கினார். இதை விளக்குவது மகேஷ்வர சூத்திரமாகும். சமஸ்கிருத இலக்கணத்தின் அடிப்படை இதுவே 'சிவசூத்திரங்கள்' எனும் காஷ்மீரத்து சைவ இலக்கியம் தான் முதலில் சிவனை (தமறு) மேளம் வாசிப்பவராக சுட்டிக்காட்டுகிறது.

ஒரு நாள் மந்தாரமலையில் சிவனும் பார்வதியும் மகிழ்ந்து இருந்தனர். திடும் என பார்வதி தன் கைகளால் சிவனின் கண்களை முடினாள். அவளது கை அழுத்தத்தால் சிவனின் கண்களில் இருந்து ஒரு துளி நீர் கீழே தெளித்தது. அத்துளியில் இருந்து 'அந்தகா' எனும் ஒரு வினோதமான குழந்தை தோன்றியது. சிவன் உடனே பார்வதியிடம் அந்தக் குழந்தையை கவனமாக பார்த்துக் கொள்ளும்படி கூறினார்.

விஷ்ணுவின் இருப்பிட வாயில் காவலர்கள் ஜெயா, விஜயா இருவரும் ஜனகா, ஜனந்தா எனும் இரு ரிஷிகளை ராட்சதர்கள் ஆக பிறக்கும் படி சாபமிட்டனர். அவர்கள் கிருதாயுகத்தில் ஹிரண்ய கசப்பு, ஹிரண்யக்ஷா எனும் பெயரில் ராட்சதர்களாக பிறவி எடுத்தனர். திரேதாயுகத்தில் அவர்கள் இராவணன், கும்பகர்ணன் ஆயினர். திவாபரயுகத்தில் சிசுபாலா, தண்டவக்ரா என பெயர் பெற்றனர். அவர்களது மூன்று பிறவிகளிலும் விஷ்ணுவால் கொல்லப்பட்டனர். ஹிரண்யக்ஷா, ஹிராய கிருஷ்யுகா இருவரும் கஷ்யபா, திதி தம்பதியரின் இரட்டைக் குழந்தைகள்.

ஹிரண்ய கசிப்புவுக்கு நான்கு மகன்கள். அவர்களுள் பிரகலாதன் மூத்த மகன். அவன் மிகவும் சிறந்த விஷ்ணு பக்தன். ஹிரண்யக்ஷனுக்கு குழந்தைகள் இல்லை. அவன் குழந்தைப்பேறு வேண்டி சிவனை தியானித்தான். சிவன் ஒரு வயோதிக பிராமணனாக அவன் முன் தோன்றி அந்தகனை அவனுக்கு அளித்தான். குழந்தை பெற்றபின் ஹிரண்யக்ஷன் தனது சக்தியை தவறாக பயன்படுத்தி அனைத்து தேவர்களையும்

சிறைப்பிடித்து தன்னிடத்திற்கு சென்றுவிட்டான். தேவர்கள் விஷ்ணுவிடம் தங்களை பாதுகாத்திட வேண்டியனர். விஷ்ணு தன் பரிவாரங்களுடன் ஹிரண்யக்ஷனின் நாடான பாதாளம் நோக்கி சென்றார். விஷ்ணுவுக்கும், ஹிரண்யக்ஷனுக்கும் இடையே உக்ரமாக போர் மூண்டது. விஷ்ணு தன் சுதர்ஷன் சக்கரத்தால் ஹிரண்யாக்ஷனை கொன்றார். அதன் பின் அந்தகனை அசுரர்களின் அரசனாக்கினார்.

அந்தகன் அரச பதவி ஏற்றதும் பிரம்மாவை வணங்கி சில வரங்களை வேண்டினான். யாராலும் அவனை கொல்லவியலாது எனும் வரம் முதலில் வேண்டினான். அதற்கு பிரம்மா யாரும் சாவிலிருந்து தப்பவியலாது என்றும், வேண்டுமானால் அந்தகன் தன் சாவு பற்றி தானே முடிவு செய்யலாம் என்றும் வரமளித்தார். அந்தகன் தான் ஒரு அழகான பெண் அல்லது மதிப்புமிக்க தாயால் மட்டுமே உயிர் இழக்க வேண்டும் என்று வேண்டினான். பிரம்மா அந்த வரத்தையும் தந்து உதவினார். அந்தகன் பின் மகிழ்ந்து வாழ்ந்தான்.

ஒரு நாள் அந்தகனின் மந்திரிகளில் ஒருவர் ஒரு அழகான பெண்ணை தன் சுற்றுப்பயணத்தில் கண்டார். தலைநகர் திரும்பியதும் அரசன் அந்தகனிடம் அந்தப் பெண்ணின் அழகை வர்ணித்து அவன் அரசனுக்கு மட்டுமே உரியவள் என பரிந்துரைத்தார். உடனே அரசன் தன் தூதுவனை சிவனிடம் அனுப்பி அந்த அழகிய பெண்ணை (பார்வதியை) தன்னிடம் ஒப்படைத்துவிட வேண்டும் எனக் கூறும் படி சொன்னான். சிவன் அந்தகனுக்கு பார்வதி வேண்டும் என்றால் அவனே நேரில் வந்து அழைத்துச்செல்லட்டும் என்று சொல்லியனுப்பினார். அதைக் கேட்ட அந்தகன் மிகவும் கோபமுற்று சிவனோடு சண்டையிடச் சென்றான். சிவன் தவம் செய்த இடத்திற்கு அந்தகன் வந்து சேர்ந்தான். சிவனின் வாயிற்காப்பான் வீரகன் அந்தகனை வாயிலிலேயே நிறுத்தினான். வீரகன் அந்தகனோடு சண்டையிட்டு மூர்ச்சையானான். கலக்கமுற்ற பார்வதி பிரம்மா, விஷ்ணு, இந்திரன் ஆகியோரின் உதவியை நாடினாள். அவர்கள் யாவரும் பெண் வேடத்தில் அங்கு விரைந்தனர். கொடூரமான சண்டை துவங்கியது. சிவனும் அவர்களோடு சேர்ந்து அசுரர்களை அழித்தனர். அசுரர்களின் குருவான சுக்ராச்சாரியார் இறந்த அசுரர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார். அதைக் கண்ட சிவன் சுக்ராச்சாரியாரை அழித்தார்.

அந்தகன் விரைந்து அவ்விடத்திலிருந்து வெளியேறினான். சிறிது நேரத்தில் புத்துணர்ச்சி பெற்று சிவனிடம் சண்டையிட மீண்டும் வந்தான். சண்டையின் போது சிந்திய ஒரு துளி அசுர ரத்தத்தில் இருந்து பலநூறு அசுரர்கள் தோன்றினர். இதைக் கண்ட விஷ்ணு தன் காதுகளிலிருந்து ஒரு பெண்ணை தோற்றுவித்து அவளை தன் நீண்ட நாக்கினால் பூலோகத்தை மூடி பூமியில் ஒரு சொட்டு ரத்தம் கூட விழாமல் காக்க பணித்தார். அந்தகனைத் தவிர அனைவரும் அழிக்கப்பட்டனர். அந்தகன் உடலில் தன் திரிசூலத்தை சொருகி, அவன் மேல் சிவன் நடனமாடினார். ஆனாலும் அவன் இறக்கவில்லை. அவனது வீரத்தை மெச்சிய சிவன் அவனை மன்னித்தார். அவனை சிவகணங்களின் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டார். அந்தகன் மேல் நின்று ஆனந்த நடனம் ஆடிய சிவன், நடராஜமூர்த்தி எனும் பெயர் பெற்றார்.



## 18. சோமாஸ்கந்தமூர்த்தி

ஸ்லோகம்:

தாதலம்பிதவாம நித்ரித்பதம் க்ருஷ்ணம் ம்ருகம் சாபயம்
டங்கஞ்சாததம் வரஞ்ச கடகம்
பிப்ராணகம் வாமகே !
வாமே லம்பித நித்ரிதான்ய பதயா
தேவ்யா யுதம் மத்யதா்
ஸ்கந்தேனாப்ஜகரத்வயேன சஹிதம்
ஸோமாகுஹேஷம் பஜே !!

பொருள்:

"வலது கையை கீழே தொங்க வைத்துக் கொண்டும், இடதுகாலை மடக்கி அமர்ந்து, மான், அபயஹஸ்தம், உடுக்கை வைத்துக் கொண்டும், இடது கையில் வரமுத்ரையும், வாளையும் வைத்துக் கொண்டும், இடது பக்கத்தில் காலை தொங்க வைத்துக் கொண்டும் அமர்ந்திருக்கும் தேவியுடன் நடுவில் இரண்டு கைகளில் தாமரையுடன் கூடிய ஸ்கந்தனுடன் வீற்றிருக்கும் ஸோமாஸ்கத்த மூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

தெய்வீக தம்பதியர் சிவனும், பார்வதியும் கைலாயத்தில் மகிழ்ந்து இருந்தனா். அவர்களை சுற்றி மிக அதிக பக்தர்கள் கூடி இருந்தனா். ஒரு சமயம் பார்வதி தனது மகன் குமாரனைக் காண விருப்பம் தெரிவித்தாள். அது சிவனுக்கு தெரிய வந்ததும் சரியென ஒப்புதல் தந்தார். பிரம்மா, விஷ்ணு ஆகியோரையும் அழைத்துக் கொண்டு அவர்கள் குமரன் இருப்பிடம் சேர்ந்தனா். குமரனைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியுற்றனா். சிவன் பார்வதியை நோக்கி "உன் மகன் குமரன் மக்களுக்கு தேவையான அனைத்தையும் தரவல்லவன். அது பற்றி நீ பெருமைப்படலாம்" என்று கூறினார்.

ஆறுமுகங்களும், பன்னிருகைகளும், இரு கால்களும், பதினெட்டு கண்களும் உடைய தன் அருமை மகனை அனைத்து பாலூட்டினாள். கீழே

சிதறிய பால் துளிகள் அருகே ஓடிய ஆற்றின் பக்கம் நகர்ந்தன. ஒரு சாபத்தின் காரணமாக மிகப்பல ரிஷிபுத்திரர்கள் அந்த ஆற்றில் வாசம் செய்தனர். அந்த பால் துளிகள் சேர்ந்த ஆற்றில் இருந்த ரிஷி புத்திரர்களின் சாபம் நீங்கிட அவர்கள் மகிழ்ந்தனர். குமரனை பத்திரமாக வளர்த்து வரும் கிருத்திகாவிடம் தன் மகிழ்ச்சியையும், நன்றியையும் பார்வதி கூறினாள். அது முதல் குமரன் கார்த்திகேயன் என அழைக்கப்பட்டான். சிவனும், பார்வதியும் கார்த்திகேயனை கைலாயத்திற்கு அழைத்து வந்தனர். இந்த நிகழ்வினால் சிவனுக்கு சோமாஸ்கந்தமூர்த்தி எனும் நாமம் வழங்கலாயிற்று.



ஆசையை வரையறை செய்: பணத்தை வீணடிக்காதே: கால விரயம் செய்யாதே: உணவை வீணடிக்காதே: சக்தியை கவனமாய் செலவிடு:

தன்னம்பிக்கையே இறை நம்பிக்கையூட்டும்.

நாடு, இனம், மொழி, செல்வச்செழிப்பு, வயது, கல்வித்தரம், ஆகிய வேறுபாடுகளையும், ஆணா, பெண்ணா எனவும் கருதுவது தகாது.

கடவுள் ஒருவரே எல்லாம் அருளி, காத்து நம் வாழ்வினை முழுமையாகச் செய்பவர்.

அனைத்து மதங்களும் காட்டும் வழி ஒன்றே, இலக்கு இறைவன்.

- பாபா

## 19. சுகாசினமூர்த்தி

ஸ்லோகம்:

சாந்தம் ஷ்வேதம் த்ரிநேத்ரம்
ரஸபுஜஸஹிதம் குண்டலோல்லாஸி கர்ணம்
தண்டம் கண்டாம் குரங்கம் பரசு
பணதரா பீதிவாமே ததான்யே
பிப்ராணம் வாமபாதம் ஷயளம பரதோ
லம்பிபூதஸ்தபாதம்
வாமே கௌர்யா ஸமேதம் ஷஷித்ர முகுடம்
தம் சுகாசீருரூபம் !!

பொருள்:

"அமைதியானவரும், வெண்மை நிற தோற்றத்தை உடையவரும், மூன்று கண்களுடன், புஜங்களை உடையவரும், குண்டலங்களால் ப்ரகாசிக்கின்ற காதுகளை உடையவரும், தண்டம், மணி, மான், பரசு, பாம்பு முதலியவைகளை தொங்க வைத்துக் கொண்டு, இடது பக்கத்தில் கௌரியுடன் கூடியவரும், சந்திரப்பிறை அணிந்த மகுடத்தை உடையவரும், நல்ல ஆசனத்தில் அமர்ந்து அருளும் சுகாஸீன மூர்த்தியை த்யானிக்கிறேன்."

விளக்கம்:

ஒரு நாள் சிவனும், பார்வதியும் கைலாயத்தில் இருந்த பொழுது, பார்வதி தனக்கு வேதங்கள் பற்றியும், ஆகமங்கள் பற்றியும் விளக்குமாறு சிவனிடம் வேண்டினாள். சிவன் மகிழ்ந்து தான் ஓம்கார ஸ்வரூபன் என்றும், ஞானத்தின் இருப்பிடம் என்றும் மொழிந்தார். நாம் இணைந்து இருப்பது சூரியனும், சூரியனின் ஒளிக்கதிர்களும் இணைந்திருப்பது போல ஆகும் என்றார். பார்வதியை அனைத்துக்கும் மூலமாக பிரகிருதி என விளக்கினார். தன்னை சுகவாகஸ்வரமூர்த்தியின் ஸ்வரூபம் என்றார். பதஞ்சலி முனிவர் சுகவாகஸ்வரமூர்த்தியின் தரிசனத்துக்குப் பின் மோட்சம் எய்தியதை பற்றியும் சொன்னார். இதனால் சிவபெருமான் சுகாசினமூர்த்தி எனும் நாமம் பெற்றார்.



## 20. திரிபுராரிமூர்த்தி

ஸ்லோகம்:

ரக்தாபம் மணிபூர்ண சந்த்ரவதனம்
க்குணம் ம்ருகம் கார்முகம்
வாமே சவ்யகரே ஷரஞ்ச தததம்
டங்கஞ்ச தேவ்யா யுதம் !!
கங்கா சந்த்ர கலாதரம்
ஹரிவிரிஞ்சாத்யைஸ்ஸதா ஸேவிதம்
ஹாஸைர்தக்த புரத்ரயம் த்ரிபுவாணாதீஷம்
புராரிம் பஜே!!

பொருள்:

"சிவந்த உருவத்தை உடையவரும், பூர்ண சந்திரனின் ஒளியைப்போல் ப்ரகாசிக்கும் முகத்தை உடையவரும், கறுத்த மான் மற்றும் கார்முகம் என்னும் ஆயுதத்தைக் கொண்டவரும், வலது கையில் அம்பை ஏந்தியவரும், உடுக்கையையும், தேவியையும் உடையவரும், கங்கையையும், சந்திரப் பிறையையும் அணிந்தவரும், எப்போதும் விஷ்ணு மற்றும் பிரம்மா அவர்களால் வணங்கப்படுகின்றவரும், விளையாட்டாக செய்வதை ரசிப்பவரும், மூன்று உலகங்களுக்கும் ஈசனுமான த்ரிபுராரிமூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

திரிபுரா என்பது மூன்று நகரங்கள் என பொருள்படும். அசுரர்களின் தலைவன் தரகாசூரன். தனது மூன்று மகன்களான தரகக்ஷா, கமலாக்ஷா, வித்யுன்மால் ஆகியோருக்கென பிரம்மாவிடம் மூன்று நகரங்களை கேட்டுப் பெற்றார். மாயப்பிரம்மா தன் கட்டிடக்கலையறிவால் தங்கம், வெள்ளி, இரும்பு ஆகியன கொண்டு மூன்று அழகிய நகரங்களை நிர்மாணித்தார். அந்நகரங்களை உருவாக்குமுன், தேவர்களை அம்மூவரும் துன்புறுத்தலாகாது என உறுதிமொழி வாங்கிக் கொண்டார்.

அந்த நகரங்கள் சுழலும் வகையில் அமைந்த சிறப்புடையவை. ஆனால் நகரம் கைவரப்பெற்றதும், அம்மூவரும் தேவர்களையும், முனிவர்களையும் துன்புறுத்தத் தொடங்கினர். அவர்கள் பிரம்மாவிடம்

சென்று முறையிட்டு உதவி கோரினார். தன் இயலாமையை கூறி, அவர்களுடன் பிரம்மாவும் சேர்ந்து சிவனைக் கண்டு முறையிட சென்றனர். சிவன் தரகாசூரனுடனும் அவனது மூன்று பிள்ளைகளுடனும் சண்டையிடுவதில் தனக்கு சிரமம் இருப்பதாக கூறினார். அவர் விஷ்ணுவிடம் முறையிடுமாறு வழிகாட்டினார். விஷ்ணுவை சென்று அவர்கள் கண்டிட அவர் யக்ஞபுருஷரை அணுகுமாறு யோசனை கூறினார். அவர் அவர்களுடன் பூதகணங்கள் சிலரை உதவிக்கு தந்து திரிபுரா நகரங்களின் படைகளை அழிக்குமாறு கூறி அனுப்பினார். ஆனால் அந்த பூதகணங்கள் தம் முயற்சியில் தோல்வியுற்றனர்.

திரிபுரா அரசகுமாரர்கள் சிவனை பூஜிப்பதில் கவனம் செலுத்தியதே அதற்கு காரணம். விஷ்ணு அவர்கள் மத்தியில் குழப்பம் ஏற்படுத்த திட்டமிட்டார். அன்னன் எனும் ஒரு பிச்சைக்காரரனை தோற்றுவித்து, திரிபுரா நகர மன்னர்களை சிவ பூசையிலிருந்து அகற்றுமாறு அனுப்பினார். ஆனால் அம்முயற்சியும் தோல்வியுற்றது. அந்த அசுரர்களின் தாக்குதலில் இருந்து தங்களை காப்பாற்றி அருளுமாறு சிவனிடம் சென்று விஷ்ணுவும் மற்றவர்களும் வேண்டினர். சிவன் அந்த அசுரர்களோடு போரிட்டு வெல்ல தனக்கு மேலும் ஆயுதங்கள் வேண்டும் என்றார். உடனே பிரம்மா, விஷ்ணுவுடன் ஏனையோரும் ஆயுதங்களாக மாறினர். அப்போது பார்வதி தேதி தன் குமாரர்களோடு அங்கு வந்தாள். அவர்களோடு பேசி மகிழ்ந்த சிவன், தான் போரிடுவதை தாமதப்படுத்தினார். விஷ்ணுவும் பிறரும் தங்கள் வேண்டுதலை தொடர்ந்து, பஞ்சாட்சரி மந்திரத்தை (நமசிவாய) உச்சரித்தபடி இருந்தனர். சிவன் மிகவும் மகிழ்ச்சியுற்றார். தான் நிச்சயம் அந்த அசுரர்களை அழித்து விடுவதாக விஷ்ணுவிடமும், பிறரிடமும் உறுதியளித்தார். அப்போது கணபதி சிவனை உற்று நோக்கிய வண்ணமிருந்தார். தன்னை தந்தை கவனிக்காததால் அவரை மேலும் தாமதப்படுத்தினார். சிவன் கணபதியிடம் தன் கவலையை விளக்கி, அபாயகரமான பசுபத அஸ்திரம் பற்றி விளக்கினார். வெகுண்டு எழுந்து போரிட்டு அந்த (சிவபக்தர்களானலும்) அசுரர்களை அழித்தார். அன்று முதல் சிவன் திரிபுராரிமூர்த்தி எனும் நாமம் பெற்றார்.



## 21. உமாமகேஸ்வரமூர்த்தி

ஸ்லோகம்:

தவலாபசுகாசன சன்னிஹிதம்
ஹரிணீம்ருக டங்கவரா பயதம்!
சுமுகம் பரமுத்பல த்ருக்வரதம்
உபயாசஹ தேவஸ்வரூபமிதம் !!

பொருள்:

"வெண்மையான உருவத்தை உடையவரும், சுகமான ஆசனத்தில் அமர்ந்திருப்பவரும், மான், உடுக்கை, வரத, அபய முத்திரையுடன் கூடிய கையை உடையவரும், அழகான முகத்தை உடையவரும், அல்லிப் பூ போன்ற கணகளால் அருள்பவரும், உமையுடன் கூடியவருமான ஈசனின் இந்த ரூபத்தை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஒரு சமயம் பகவான் கிருஷ்ணன், சிவதரிசனம் பெற விழைந்து, அதற்கான உபாயத்தை தனக்கு கூறி அருளுமாறு பிராமண அறிஞர் உபமன்யுவிடம் வேண்டினார். "சிவன் மிகவும் புனிதமானவர். அவருக்கு 'நமசிவாய' என பஞ்சாட்சரி மந்திரத்தை உச்சரித்து சேவிப்பவர்களை மிகவும் பிடிக்கும்" என்று வழிகாட்டினார். கிருஷ்ணர் அவ்வழியை பின்பற்றி சிவனையும், உமாவையும் தரிசிக்கும் பாக்யம் பெற்றார். சிவன் மகிழ்ந்து கிருஷ்ணனுக்கு நிறைய வரங்களை அருளினார். மகிழ்ந்த கிருஷ்ணனும் பின் மகாபாரதக் கதையின் மூல புருஷனாக மலர்ந்தார். இதன் பின் சிவன், உமாமகேஷ்வரமூர்த்தி என நாமம் சூடினார்.



## 22. வீரபத்ரமூர்த்தி

ஸ்லோகம்:

நீலாபம் ரக்தாவஸ்த்ரம் ப்ருகுடியுதமுகம்
ஜ்வாலகேஷம் த்ரிநேத்ரம்
சவ்யே கட்கஞ்ச தண்டம் த்ரிஷிக்பரசும்
வாமபாகே கபாலம்!
கேடம் கண்டாம் வஹந்தம் முஸலமபி
ததத் கிங்கிணீமாலயாட்யம்
சிம்ஹதவக் வ்ருதசக்திம் ஸ்புரது மம புரோ
வீரபத்ரஸ்வரூபம் !!

பொருள்:

"கறுப்பான உருவத்தை உடையவரும், சிவந்த வஸ்த்ரத்தை அணிந்தவரும், நெறிக்கின்ற புருவத்தை உடையவரும், தீக்கொழுந்து போன்ற கேசங்களையும், முக்கண்களை உடையவரும், வலது கையில் தண்டத்தையும், மாலையும், பரசுவையும், கத்தியையும் கொண்டவரும், இடது பக்கத்தில் கபாலத்தையும், கேடயத்தையும், மணியையும், மகுடியையும் ஏந்தியவரும், கிங்கிணி மாலையால் ஒளிர்பவரும், சிங்கத்தோலால் சுற்றப்பட்ட உடலை உடைய சக்தியுடன் வீரபத்ரம் உருவம் என் முன்பு ப்ராகாசிக்கட்டும்."

விளக்கம்:

தக்ஷ பிரஜாபதி பிரம்மா ஒரு மிகப்பெரிய யாகத்தை தன் மருமகன் சிவனை அழைக்காமல் செய்ய முற்பட்டார். மேலும் அனைத்து ரிஷிகளின் முன் சிவனை மிக ஏளனமாக பேசி அவமதித்தார். யக்ஞபுருஷனாகிய சிவன் இல்லாமல் எந்த யாகமும் முழுமைபெறாது என தக்ஷனிடம் ததிசி எனும் முனிவர் கூறினார். அங்கிருந்த எவரும் அதை மதித்து கேட்டதாக தெரியவில்லை. அப்படி அவமதிக்கப்பட்ட அந்த ரிஷி தனது அதிருப்தியை தெரிவித்துவிட்டு அந்த இடத்தை விட்டு அகன்றார்.

தக்ஷனின் மகள் சதி சிவனின் மனைவி. தனது கணவனின் சொல்லை மீறி அந்த யாகத்திற்கு சதி சென்றாள். அவள் வருகையை

கண்டு கொள்ளாமல் அவள் எதிரிலேயே தன் தந்தை சிவனை பழித்ததை அவளால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. தனது யோக சக்தியால் அங்கேயே தன் உயிரை மாய்த்துக் கொண்டாள். இதையறிந்த சிவன், மிகவும் கோபமடைந்தார். தனது ஒரு முடியினை கிள்ளி எடுத்து, அதனால் வீரபத்திரன் எனும் மனிதனை உண்ணும் அரக்கனை தோற்றுவித்தார். அந்த யாகத்தை அழித்திடவென வீரபத்திரனை பணித்தார். உண்மையில் தக்ஷனை தண்டிக்க சிவனே வீரபத்திரர் உருவெடுத்தார். வீரபத்ரர் தன் மனைவி பத்ரகாளியுடன் யாகசாலையை தன் பராக்கிரமத்தால் அழிக்கச் சென்றார். வீரபத்ரரின் கோபத்தையும், அவர்தம் ஆற்றலையும் அறிந்த தேவர்கள் அனைவரும் அந்த இடத்தை விட்டுவிலகினார். தக்ஷன் வீரபத்திரனை யார் என வினவினான். அதற்கு அவர் தான் சிவனின் கூட்டாளி என்றும், யாகத்தின் முடிவில் சிவப்பிரசாதம் சாப்பிட வந்துள்ளதாகவும் கூறி தக்ஷனை கண்டித்தார். அதற்கு ஒப்பாமல் தக்ஷன் போரிட தயாரானான். அது பிடிக்காததால் வேதங்கள் பிரம்மலோகத்திற்கு திரும்பிச் சென்றன. தக்ஷனின் பிடிவாதம் பொருக்காத வீரபத்ரரும், அவரின் சகாககளும் யாக குண்டத்தை அழித்தனர். தக்ஷனின் தலையை கொய்தனர். அந்த தலை பத்ரகாளியின் விளையாட்டுப் பொருளானது.

நிகழ்ந்தவற்றையறிந்த விஷ்ணு தன்னுடைய சகாக்களுடனும், கருடனுடனும் வீரபத்ரரை எதிர்த்து போரிட துவங்கினார். எதிர்பக்கம் பிரம்மாவினை வீரபத்திரருக்கு தேர்பாகனாக்கிறார் சிவன். விஷ்ணு தன் சக்ராயுதத்தால் வீரபத்திரனை கொல்ல விரைந்தார்.

ஆனால் வீரபத்திரர் தன் யோகசக்தியால் விஷ்ணுவின் கைகளின் அசைவை கட்டுப்படுத்தினார். விஷ்ணுவின் சகாக்கள் அனைவரும் பலமிழந்தனர். நிலைமையை கண்ட தக்ஷன் சிவனிடம் சரணடைந்து வீரபத்திரரை கட்டுப்படுத்திட வேண்டினான். வீரபத்திரனை சிவன் சமாதானம் செய்தார். தக்ஷனின் தலைக்கு பதில் ஒரு ஆட்டின் தலையை சிவன் பொருத்திடச் செய்தார். தக்ஷன் தன் தவற்றினை உணர்ந்து சிறந்த சிவபக்தறாக மாறினான்.

இதனால் சிவன் வீரபத்திரமூர்த்தி எனும் நாமம் பெற்றார்.



## 23. விக்னேஷானுக்கிரகமூர்த்தி

ஸ்லோகம்:

டங்கம் க்ருஷ்ண ம்ருகம்
ததானமஸலம் ப்ராலம்பி சவ்யாங்க த்ரிகம்
வாமே நித்ரிதபாதமிந்து சத்ருஷம்
த்ரயக்ஷம் ஜடாசேகரம்
வாமாலிங்கித விக்ணராஜமிதரே ஹஸ்தே
த்வபூபம் தரம்
ப்ரீத்யானுக்ரஹகரம் த்ரிபுண்ட்ரகதரம்
விக்ன ப்ரசாதம் பஜே!!

பொருள்:

“உடுக்கை, கறுத்த மான் ஏந்தியவரும், தொங்குகிற வலது கையை உடையவரும், இடது பக்கம் சந்திரனைப் போன்று ஒளிவீசக் கூடிய பாதங்களை உடையவரும், மூன்று கண்ணை உடையவரும், ஜடாமுடியை தரித்தவரும், வலது கையால் விக்னேஸ்வரரை அணைத்துக் கொண்டிருப்பவரும், வேறு கையில் வடையை வைத்திருப்பவரும், மூன்று பட்டைகளை அணிந்தவரும், அன்புடன் விக்ணங்களைப் போக்கி அருளையும், அனுக்ரஹத்தையும் அளிப்பவருமான விக்னேஸ்னுக்ரகமூர்த்தியை வணங்குகிறேன்.”

விளக்கம்:

சிவனும், பார்வதியும் கைலாயத்தில் மகிழ்ந்து இருந்தனர். ஒரு நாள் அவர்களிடம் ஜெயா, விஜயா என்ற இரு பணியாளர்கள், கைலாயத்தின் பாதுகாப்பு வீரர்கள் பற்றி, தங்கள் கவலை தெரிவித்தனர். அவர்கள் தங்கள் பணியில் கவனக்குறைவாக இருப்பதாக கூறினர். பார்வதியிடம் தனியாக புது பாதுகாவலர்களை வைத்துக் கொள்ளுமாறு கூறினர். ஆனால் பார்வதி அவர்கள் கூறியதை பொருட்படுத்தாமல் நந்தியை தொடர்ந்து தன் பாதுகாவலராக தொடர்ந்தார். ஒரு சமயம் பார்வதியை காண சிவன் அவரிடத்துக்கு வருகை தந்தார். பாதுகாவலர் நந்தி சிவனை உள்ளே விடாமல் தடுத்தார். சிவன் நந்தியை

பயமுறுத்திவிட்டு உள்ளே பார்வதியிடம் சென்றார். அப்போது பார்வதி தனக்காக வேறு பாதுகாவலர்கள் தேவை என உணர்ந்தார். ஒரு அழகான பலசாலியான இளைஞனை புது பாதுகாவலராக நியமித்து, அவனுக்கு ஒரு பலமான கழி ஒன்றை ஆயுதமாகவும் அளித்து, விளக்கமாக அறிவுரை கூறினாள்.

பின் ஒரு நாள் சிவன் பார்வதியின் இருப்பிடத்திற்கு வருகை தந்த போது அந்த இளைஞன் அவரை தடுத்து நிறுத்தினான். அவனைப்பற்றி விசாரித்து விட்டு, சிவன் அவனை பணியிலிருந்து விலக்குமாறு சிவகணங்களுக்கு உத்திரவிட்டார். ஆனால் அவனோ சிவகணங்களுடன் போராட தயாரானான். பதற்றமுற்ற சிவன், பார்வதியின் இருப்பிடம் நோக்கி செல்ல முயன்றார். சிவனை இளைஞன் மீண்டும் தடுக்க முற்பட, சிவன் நந்தியையும், பிருங்கியையும் நிலைமையை சமாளிக்கும்படி பணித்தார். மூர்க்கமான சண்டை மூண்டது. நந்தி, பிருங்கி ஆகியோர் அணி மிகவும் தாக்குதலுக்கு ஆளானது. ஆனால் பார்வதியின் அணியிணர் தங்களை எதிர்த்துக் போரிட பிரம்மா வருவதாக அறிந்தணர். பிரம்மாவும் பயமுறுத்தப்பட்டார். வேறு வழியின்றி பிரம்மா சிவனை நாடி உதவி கோரினார். ஆத்திரமடைந்த சிவன், தானே பார்வதியின் அணி ஆட்களை தாக்கி அழிக்க முடிவு செய்தார். பார்வதி தன்னைக் காத்துக் கொள்வதற்காக இரண்டு பலம் வாய்ந்த பெண் காவலர்களை நியமித்து சிவகணங்களை தோற்கடிக்க முற்பட்டார். தங்கள் பலத்தால் அந்த பெண் காவலர் இருவரும் சிவகணங்களை தோல்வியுறச் செய்தணர். நாரதர் அப்போது சிவனை சந்தித்து, அவரது எல்லையற்ற பலத்தை நினைவுபடுத்தினார். சிவனும் விஷ்ணுவும் இணைந்து போரிட்டும் பார்வதியின் அணியிணர் பின்வாங்கவில்லை. இறுதியில் சிவன் பார்வதியின் புது காவலன் இளைஞனின் தலையை கொய்தார். மிகவும் வருத்தமடைந்த பார்வதி பலபெண்களை உருவாக்கி அவர்கள் மூலம் பெரும் குழப்பத்தை உருவாக்கினாள். சண்டையினை முடிவுக்கு கொண்டு வர பெரிதும் விரும்பிய நாரதர் சிவன், விஷ்ணு இருவரையும் அணுகி பார்வதியினை சமாதானம் செய்யுமாறு வேண்டினார். அதற்கு பார்வதி தன் பாதுகாவலனான இளைஞனின் உயிரை மீண்டும் வழங்கினால் மட்டுமே அந்தப் பெண்களை திரும்பப்பெற்று அமைதிக்கு உதவுதாக கூறினாள். உடனே சிவன் சம்மதித்து தன் அணியினரை வடக்கு திசையில் சென்று ஒரு

மனிதன்/மிருகம் தலையினை கொண்டு வந்து, அந்த இளைஞனுக்குப் பொருத்தி உயிர்ப்பிக்க ஒப்பினார். வடக்கு நோக்கிச் சென்ற சிவகணங்கள் ஒரு யானையை எதிர் கொண்டன. உடன் அதன் தலையை கொய்து எடுத்து வந்து, அந்த இளைஞனின் உடலில் பொருத்தி வேத மந்திரங்கள் ஓதி, புனித நீரை தெளித்தனர். இளைஞன் உயிர்பெற்று எழுந்தான். அவன் யானையின் தலையினை பெற்றதால் கஜானன் அல்லது கஜவதன் என அழைக்கப்பட்டான். அது முதல் சிவன் விக்னேஷ்வரானுக்கிரமூர்த்தி என்ற நாமம் பெற்றார்.



மகன் தந்தையின் ஆஸ்திக்கு வாரிசு. அது போலவே அனைத்து மனிதர்களும் இறைவன் செல்வங்களான அமைதி, பொருமை, கனிவு ஆகியவற்றுக்கு வாரிசுகளாம்.

செய்திகளின் தொகுப்பாய் அமைந்த கல்வி மனிதனை ஒரு கணினி ஆக்குகிறது. ஆனால் உயர்மாற்றம் விளைவிக்கும் கல்வியே அவனை படைப்பாளி ஆக்குகிறது.

- பாபா

## 24. விஷாபஹரணமூர்த்தி

ஸ்லோகம்:

பானு நிபவேதகர வஹ்னி நயனம் ஸ்யாத்
தக்ஷகர விஷபக்ஷண வரத ஹஸ்தம்
ரக்த வஸனான்வித ஜடாலம்பயுக்தம்
பீமவதனானின்வித விஷாபஹரஸ்வரூபம் !!

பொருள்:

"சூரியனைப் போன்று பிரகாசிப்பவரும், வேதத்தை கையில் உடையவரும், நெருப்பை கண்ணிலுடையவரும், விஷத்தை உண்டவரும், வலது கையில் வர முத்திரையுடன் சிவந்த ஆடையை அணிந்திருப்பவரும், தொங்கும் ஜடாமுடியை உடையவரும், பயமேற்படுத்தும் முகத்தையுடையவருமான விஷாபஹரணமூர்த்தியை வணங்குகிறேன்."

விளக்கம்:

ஒரு சமயம் அரக்கர்கள் அட்டூழியம் அதிகமாகிவிடவே, தேவர்கள் மிக அதிக இழப்புக்கு ஆளாகினர். தங்களின் பெருமையை மீண்டும் நிலைநாட்டிட விருப்பம் கொண்டனர்.

திடீர் என எங்கோ இருந்து ஒரு அசரீரி குரலை அவர்கள் கேட்டனர். பாற்கடலை கடைந்திட்டால் பல நன்மைகள் நிகழும் என கூறி ஊக்குவிப்பதாக அது இருந்தது. தேவர்களின் தலைவன் இந்திரன் குறிப்பாக துர்வாசரின் கோபத்துக்கு உள்ளாகியதால், மிக அதிக இழப்புக்கு ஆளாகி இருந்தான். இந்திரன் விஷ்ணுவிடம் சென்று அறிவுரை வேண்டினான். விஷ்ணு இந்திரனிடம் அரக்கர்களோடு நட்பு பாராட்டி அவர்களையும் சேர்த்துக் கொண்டு பாற்கடலை கடைந்திட பல நன்மைகள் விளையும் என்று கூறினார். அவைகளில் அமிர்தம் தோன்றுதல் மிக முக்கியமானது என்றும் அந்த அமிர்தம் தன்னை உண்டு தேவர்கள் அழியாத நிலைத்த வாழ்வினை பெற்று இழந்த செல்வமெல்லாவற்றையும் பெற முடியும் என்றும் கூறினார்.

தேவர்களும் அசுரர்களும் இணைந்து பாற்கடலை கடைவது எனவும், கிடைக்கும் பலன்களை சமமாக பிரித்துக் கொள்வது எனவும் ஒப்புக்கொண்டனர். மந்தராமலையினை மத்தாகவும், பாம்பினை

கயிராகவும் பயன்படுத்த விரும்பினர். விஷ்ணு மிகப்பெரிய ஆமையாக உருவெடுத்து அந்த மந்தாரமலையினை அமிழ்ந்துவிடாமல் தாங்கிப்பிடிக்க ஒப்புக் கொண்டார். இத்தகைய முன்னேற்பாடுகளுடன் தேவர்களும், அசுரர்களும் பாற்கடலை கடையத் தொடங்கினர். அதன் பலனால் கடலிலிருந்து காமதேனு (ஆசையை நிறைவேற்றும் பசு) உச்சைஸ்வரவஸ் (வெண்மையான குதிரை) ஐராவதம் (யானை) கஸ்துபாபணி (விலைமதிப்பில்லாத ரத்தினம்) கற்பக விருட்சம் (வேண்டுவதை தரும் விருஷம்) லட்சுமி (செல்வ தேவதை) சூரா அல்லது வருணி (மதுவின் தேவதை) தன்வந்திரி (அமிர்த கலசத்துடன் மருத்துவர்களின் தெய்வம் தன்வந்திரி) ஆகியன கிடைக்கப்பெற்றனர். மேலும் மிக அதிக வீரியம் உள்ள ஆலகால விஷமும் வெளிப்பட்டது. உலகமே அந்த ஆலகாலவிஷத்தால் அழிய விருந்ததை உணர்ந்த சிவன், அந்த விஷத்தை தானே விழுங்கி உலகினை காப்பாற்றினார். அந்த விஷம் தன் கணவரை பாதித்து விடுமே என்ற கவலையில் பார்வதி விரைந்து சிவனின் கழுத்தை நெறுக்கிப்பிடித்து விஷம் உள் சென்றுவிடாதபடி பிடித்தார். அந்த விஷம் நீலநிறமானது. இந்த நிகழ்வால் சிவன் நீலகண்டன் ஆனார். இந்த நிலையில் தேவர்களிடையேயும், அசுரர்களிடையேயும் மணஸ்தாபங்கள் ஆரம்பமாயின. கிடைத்த அரிய பொருள்களை தங்களுக்குள் பிரித்து எடுத்துக்கொள்வதில் ஏற்பட்ட தகராறு அது. முக்கிய விஷயம் அரிய அமிர்தத்தை எடுத்துக் கொள்வதில் உடன்பாடு இயலவில்லை. ஆனால் எப்படியோ அமிர்த கலசத்தை அசுரர்கள் கைப்பற்றிவிட்டனர். தேவர்கள் கலங்கினர்.

சிவனிடம் தங்களுக்கு உதவிட பிரார்த்தித்தனர். சிவன் விஷ்ணுவை மோகினியாக (மாயா)உருவாக்கி, அசுரர்களை அமிர்தத்தை பத்திரமாக கையாண்டு, பகிர்ந்து கொள்ள உதவுவதாக கூறுமாறு சொன்னார். விஷ்ணு அமிர்த கலசத்தை அவர்களிடமிருந்து சாமர்த்தியமாக பெற்றபின், தேவர்களுக்கு பகிர்ந்து தர அவர்கள் மிகவும் பலம் பெற்றனர். இந்நிகழ்வால் நீலநிற கண்டம் பெற்ற சிவன் நீலகண்டன் எனும் நாமம் பெற்றார். அவரே விஷாபஹரணமூர்த்தி.



## 25. ரிஷபாருதமூர்த்தி

ஸ்லோகம்:

ஸவ்யே ஸ்யாச்சக்ர தண்பான்விதகடககரோ
கோபதேர்மஸ்தகஸ்தோ
வாமேஸ்யார்தம் ச பக்ஷ: பரகரயுக்லே
டங்க க்ருஷ்ணம் ததானம்
ப்ருட்ஸ்தோக்ஷம் ப்ரசன்னம் த்ரிநயனஸஹிதம்
பக்த வேணீகிரிடம்
வாமே கௌர்யா ஸமேதம் பஜத கிரியுதம்
தம் வ்ருஷாரூடமீஷம் !!

பொருள்:

"வலது கையில் சக்ரதண்டம், வாள் முதலியவைகளுடனும், பசுவின் பதியான காளையின் தலைக்குப் பின்புறம் கட்டப்பட்ட ஜடாமுடியை கிரீடமாகக் கொண்டவரும், மூன்று கண்களை உடையவரும், மலையின் மேல் மகிழ்ச்சியோடு இடதுபுறத்தில் கௌரியுடன் காளை வாகனத்தில் அமர்ந்தருள் புரிபவருமான ஈசனை வணங்குகிறேன்."

விளக்கம்:

பாற்கடலை அசுரர்களும் தேவர்களும் கடையும் போது அமிர்தமும் இன்னும் பல அரிய பொருள்களும் தோன்றின. அமிர்த துளிகளில் சில கீழே தெளித்தன. அவை பல அழகிய பெண்களாக உருவெடுத்தன. அசுரர்கள் அவர்களைக் கண்டதும் அவர்கள் மீது மோகம் மேலிட, அவர்களோடு மகிழ்ந்திருந்தனர். அமிர்தத்தை தேவர்கள் பெற்றனர். அதன் பின் அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் இடையே பெரும் போர் மூண்டது. தேவர்கள் அணிக்கு விஷ்ணு தலைமையேற்றார். அசுரர்கள் தோற்கடிக்கப் பட்டனர். தேவர்கள் அவர்களை பாதாளத்திற்கு விரட்டிச் சென்று கட்டுப்படுத்தினர். பாதாளத்தில் இருந்த பெண்களின் அழகில் மயங்கிய விஷ்ணு, அங்கேயே தங்கிட விரும்பினார். அதன்பின் விஷ்ணுவின் குமாரர்கள் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் தொல்லை தர ஆரம்பித்தனர்.

தேவர்களின் கஷ்டத்தை உணர்ந்த பிரம்மா, சிவனிடம் சென்று நிலைமையை விளக்க தேவர்களை காக்க வேண்டினார். சிவன் ரிக்ஷப ரூபம் எடுத்து பெரிய சேனையுடன் பாதாளலோகம் சென்று சண்டையிட தொடங்கினார். அசுரர்களும் விஷ்ணுவும் மிக முயன்றும் சிவனின் படைகளை கட்டுப்படுத்தவியலவில்லை. விஷ்ணு தோல்வியடைந்தார். விஷ்ணு ரிஷபரூபத்தில் வந்தது சிவனே என உணர்ந்தார். சிவன் விஷ்ணுவிடம் தனது காத்தல் தொழிலை கவனிக்காமல் விட்டதை சுட்டிக்காட்டி கண்டித்தார். தன் தவற்றினை உணர்ந்து, ஒப்புக் கொண்டு விஷ்ணு தன் சக்ராயுதத்தை எடுத்துக் கொண்டு பாதாளத்தைவிட்டு தன் இருப்பிடம் செல்ல உறுதி கூறினார். சிவன் அந்த சக்ராயுதம் பாதாள உலகத்திலேயே இருந்து தீயவர்களை அழிக்க பயன்படட்டும் என்று கூறி, நல்லவர்களை காத்திட மேலும் ஒரு சக்ராயதம் தந்து மகிழ்ந்தார். இந்நிகழ்வுக்குப் பின் சிவன் ரிஷபாருதமூர்த்தி எனும் நாமம் பெற்றார்.




அர்த்தநாரீஸ்வரா


பிக்ஷாடனமூர்த்தி


சந்தேஷானுக்ரக மூர்த்தி


சக்ரதானமூர்த்தி


சோமாஸ்கந்தமூர்த்தி


விஷாபஹரணமூர்த்தி


தக்ஷிணாமூர்த்தி


கஜாரிமூர்த்தி


ஏகபாதமூர்த்தி


கிராதமூர்த்தி

காலாரிமூர்த்தி



லிங்கோத்பவமூர்த்தி




நடராஜமூர்த்தி

உமாமகேஸ்வரமூர்த்தி



ஜலந்தரஹரமூர்த்தி



சுகாசினமூர்த்தி



விக்னேஷானுக்கிரகமூர்த்தி



கங்காலமூர்த்தி



ஹரிகரமூர்த்தி



காமாரிமூர்த்தி



திரிபுராரிமூர்த்தி



கல்யாணசுந்தரமூர்த்தி



ரிஷபாருதமூர்த்தி



சந்திரசேகரமூர்த்தி



வீரபத்ரமூர்த்தி

